# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை



சிலம்பு-௫௫ ] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௨, வைகாசி June. '81 [பரல் - ௧௦

---

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௨, சித்திரை | பரல் |
|---|---|---|
| ௫௫ | சூன் 1981 | ௧௦ |

## மணிவிழாக்காணும் கழகத்தின் வளர்ச்சிக்குத் துணைபுரிந்த பெருமக்களுக்குக் கழக ஆட்சியரின் நன்றியுணர்வு

கடந்த அறுபதாண்டுக் காலத்தில் ஆல்போல் தழைத்து' அனைத்துலகப் புகழ் ஈட்டி, அருந்தமிழ் வளர்த்த பெரு நூற்பதிப்புக் கழகமாய்த் திகழ்ந்து அண்மையில் மணிவிழாக் காணும் இக் கழகம் தோன்றிய நாள் முதல் இன்றுவரை தொடர்ந்து கழகப் பணியில் ஈடுபட்டு வரும், பிறர்க்கு எய்தாப் பெரும்பேற்றினை இறைவன் எனக்கு நல்கியுள்ளான். அறுபதாண்டு என்னும் நெடிய காலப் பகுதியில் கழகம் தத்தித் தளர்நடையிட்டுப் பின் எத் திசையும் புகழ் மணக்க வளர்ந்த பழைய வரலாறு என் கண்முன்னே நிழலாடுகின்றது. கழக வளர்ச்சிக்குப் பெரிதுங் காரணமாய் அமைந்த பெரியோர்களையும் பேரறிஞர்களையும் இச் சமயத்தில் நெஞ்சார நினைந்து உவகை மீக்கூர்ந்து நன்றி பாராட்டிப் புகழ்ந்து போற்றுகின்றேன்.

எனது மூன்றும் அகவையிலேயே என்னைப் பிரிந்து சென்றதால் எந்தையின் திருமுகம்கூட என் நெஞ்சத்தில் பதியவில்லை. ஆனால் தந்தையுமானவரான என் தாயின் அரவணைப்பில், அன்பு மழையில் 55 ஆண்டுகள் நனைந்து தழைந்தேன். இக்கால் ஈன்ற பொழுதினும் பெரிதுவக்க உயிருடன் இல்லாத பெற்ற தாயின், உற்ற தந்தையின் நற்ருள் நினைந்து நயந்து போற்றுகின்றேன்.

தம்பியாவது பெருங்கல்வி பெற்றுச் சிறந்தோங்கட்டும் என்று விழைந்து, தந்தையின் இடத்தில் நின்று, கல்லூரிக் கல்வி பெறச்

செய்து என்னை ஆளாக்கி விட்டவர் என் அன்பு அண்ணனார் திருமிகு திருவரங்கர் ஆவர். நூல்களைத் தொகுத்தல், அறிஞர்களின் படங்களைத் தொகுத்தல், நூல்களை அச்சிடல், விற்றல் என்றினைய கலைகள் பலவும் எனக்குக் கற்றுத் தந்தனர். அவர் வழியாகத்தான் கல்வியிற் பெரிய மறைத்திரு மறைமலையடிகளாரின் தனித்தமிழ்ப் பற்றும், சைவமும் தமிழும் இரு கண்ணெனப் போற்றி வளர்க்கும் பணியும், இந்தி எதிர்ப்பும் கழகத்தின் அடிப்படை நெறிகளாயின.

யான் திருநெல்வேலிக் கல்லூரியில் பயிலுங் காலத்தே கழகத்தின் அமைப்பு விதிமுறைகளை வகுப்பதில் பங்குபெறும் வாய்ப்பினைப் பெற்றேன். அவ் விதிமுறைகளை நெறி பிறழாது அறுபதாண்டுகள் கொண்டு செலுத்தும் நற்பேறும் பெற்றேன்.

1920இல் இக் கழகம் தோன்றக் காரணமாக இருந்ததோடு முதலில் நூறு பங்குகள் எடுத்துக்கொண்டு பணம் வழங்கிய திரு. தி.செ. விசுவநாதபிள்ளையவர்களைத் தெய்வமெனவே நினைந்து போற்றுகின்றேன். இவருடைய வழிநின்று திரு. மா. திரவியம் பிள்ளையவர்கள் திருவரங்கம் பிள்ளையவர்களுடன் சேர்ந்து கழகத்தை நிறுவிக் கூட்டமைச்சர்களாக இணைந்து செயலாற்றினர்.

தனித்தமிழ் இயக்கத் தந்தை, தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மூன்றிலும் முற்றிய புலமை எய்தித் தமிழ் இலக்கிய வரலாற்றில் தனியிடம் பெற்றவர், புதுப்புதுத் துறைகளில் இனிக்கும் நற்றமிழில் இணையில்லா ஆய்வு நூல்களை எழுதித் தமிழுக்கும் சைவத்திற்கும் தனிப்பெருந்தொண்டாற்றிய மறைத்திரு மறைமலையடிகளாரின் தொடர்பு கழகத்திற்குத் தொடக்கத்திலிருந்தே இருந்து வந்திருக்கின்றது. அடிகளாரின் நுண்மாண் நுழை புலமைத் திறம் விளங்க எழுதப்பெற்ற திருவாசகத்தின் முதல் நான்கு அகவல்களின் விரிவுரை 'செந்தமிழ்க் களஞ்சியம்' என்ற பெயரில் வெளியிடப்பெற்றது. பிற்காலத்தில் அடிகளாரின் இறுதி விருப்ப ஆவணம் இறைவன் திருவருளால் கழக வளர்ச்சிக்கு உறுதுணையாயிற்று. மறைந்தபின்பும் அடிகளார் ஆவியுலகத்திலிருந்து எனக்குப் பல்லாற்றானும் தோன்றாத் துணையாயிருந்து யான் எண்ணிய காரியம் யாவினுக்குங் கைகொடுத்துள்ளார். அவர் தம் வாணாளில் பெருஞ் செலவு செய்து தொகுக்கப்பெற்ற நூல்கள் யாவும் 'மறைமலையடிகள் நூலகம்' என்று அவர் பெயரால் நிறுவப்பெற்ற உயர் நூலகத்தில் பாதுகாக்கப்பெற்று வருகின்றன. அவர் இயற்றிய ஆய்வு நூல்கள் கழகத்தில் அச்சிடப்பெற்று விற்பனை செய்யும் வாய்ப்பைப்

பெற்றுள்ளன. அடிகளார் வாழ்ந்த பல்லாவரம் வளமனை அரசின் உதவியால் வாங்கப்பெற்று 'மறைமலையடிகள் கலைமன்றம்' என்ற பெயரில் கலைமணங் கமழ்ந்து வருகிறது. 'இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து' அடிகளார் என்பால் சில பொறுப்புக்களைத் தம் விருப்ப ஆவணத்தில் குறித்தவாறு நிறைவேற்றியுள்ளேன்.

கழகம் தொடங்கிய காலந்தொட்டே தமிழ் வல்ல அறிஞர் பெருமக்கள் கழகத்தோடு தொடர்பு கொள்ளுமாறு இறையருள் இயைவித்தது. கூர்த்தமதி படைத்த ஆழ்ந்தகன்ற கல்வியாளர் பேரறிஞர் கா. சு. பிள்ளையவர்களின் தொடர்பு எனக்கு ஏற்பட்டது. நாள்தோறும் மாலையில் கழகப் பணியை முடித்துவிட்டு அவரது இல்லம் சென்று திருக்குறளுக்குப் புதியதொரு பொழிப்புரையை அவர் சொல்லச் சொல்ல எழுதினேன். மேலும் அவர் நால்வர் பெருமக்கள், தாயுமானவர், பட்டினத்தார், குமரகுருபரர், சிவஞான முனிவர், மெய்கண்டார் ஆகியோரின் வரலாறுகளையும், நூலாராய்ச்சிகளையும் எழுதுவித்தார். இத்தகைய பேரறிஞர்களின் தொடர்பால் கழகத்திற்குப் புதியதொரு பொலிவு ஏற்பட்டது.

அடுத்து, என்பால் பேரன்பு பூண்டவரும், கிறித்தவக் கல்லூரித் தமிழ்ப் பண்டிதருமான திரு. வா. மகாதேவ முதலியார் அவர்களின் அரிய நட்பு எனக்கு ஏற்பட்டது. சோமேசர் முதுமொழி வெண்பாவிற்குச் சிறந்ததொரு தெளிவுரை வரைந்தளித்தார். நளவெண்பா, நாலடியார் ஆகிய நூல்களுக்கும் நல்லுரை நல்கினார்.

மறைமலையடிகளாரின் மாணவருள் ஒருவரும், திருக்குறளுக்குத் திருந்திய விரிவுரை எழுதும் வல்லமை வாய்ந்தவருமான திரு. நாகை சொ. தண்டபாணிப் பிள்ளையவர்கள் திருக்குறள் முழுவதற்கும் உரை எழுத ஒப்புக்கொண்டார். ஆனால், திருக்குறளின் முதல் முப்பது அதிகாரங்கட்கு உரை எழுதியதும் இவருக்கு இருமல் நோய் வந்துவிட்டது. இராயப்பேட்டை என்புருக்கி நோய் மருத்துவமனை சென்று நாடொறும் அவரைக் கவனித்து வந்தேன்; மருந்துகள் வாங்கிக் கொடுத்தேன். எனினும் அறத்துப்பாலை முடித்து மேலும் நான்கு அதிகாரங்கட்கு உரை எழுதியதும் நோய் மிகுதிப்பட்டு இறையடி எய்தினார். 1933இல் 'திருக்குறள் அறத்துப்பால் தண்டபாணி விருத்தியுரை' என்ற தலைப்பில் அவர்தம் புலவர் போற்றும் விரிவுரை வெளியிடப்பெற்றது.

(தொடரும்)

# 'பதிப்புக் கலைப் பார்வை'-2.

[கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

(சிலம்பு ௩௦, பரல் ௫, ௨௦௨ஆம் பக்கத் தொடர்ச்சி)

## ௨. பார்ப்பார் - குரவர்

புறநானூற்றின் 34 ஆம் பாடல் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஆலத்தூர்கிழார் பாடியதாகும். அப் பாடல் செய்ந் நன்றி மறவாமையைச் சீர்பெற விளக்குகிறது.

''ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கில் கழுவாயும் உளவென
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி இல்லென
அறம்பா டிற்றே''

என்பது அப் பாடலின் முற்பகுதி. இதிலுள்ள, ''பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்'' என்னும் அடி, புறநானூற்று உரையாசிரியர் காலத்திற்கு முன்னரே மூல ஏட்டில் இடம் பெற்றிருந்தது என்பது ''பார்ப்பாரைப் பிழைத்த கொடுந்தொழிலை யுடையோர்க்கும்'' என அவர் உரைவகுப்பதால் கொள்ளலாம்.

புறநானூற்றில் வரும் இப் பகுதியை ''எந்நன்றி கொன் றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு'' என்னும் திருக்குறள் உரை விளக்கத்தில் ஆசிரியர் பரிமேலழகர், 'பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலையறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், பார்ப்பார்த் தபுதலும் முதலிய பாதகங்களைச் செய்தல்'' என உரைநடையாக்கிக் காட்டுகின்றார். ஆகலின், அவர் காலத்திலும் இப் பாடம் இருந்தது என்பது உறுதி யாகின்றது.

1861 ஆம் ஆண்டில், அஃதாவது துன்மதி ஆண்டு வைகாசித் திங்களில் திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையுமாக ஆறுமுக நாவலரவர் கள் பதிப்பித்த பதிப்பில், பரிமேலழகரின் உரைப்பகுதியின் அடிக் குறிப்பாக மேலே குறித்த புறநானூற்றுப் பகுதியை மேற் கோளாகக் காட்டியுள்ளார். அதில், மூன்றும் நான்காம் அடிகள்,

''ஞரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வருவாய் மருங்கில் கழுவாயும் உளவே''

என்னும் பாடத்துடன் உள்ளன. இப் பதிப்பு வெளிப்பட்டு 83 ஆண்டுகள் கடந்த பின்னரே (1894) ஐயரவர்களால் புறநானூறு பதிப்பிக்கப்பெற்றுள்ளது. இருந்தும், இப் பாடம் கொள்ளப் பெற்றிலது.

ஐயரவர்கள் அரிதின் முயன்று ஏடுகள் தொகுத்து, ஒப்பிட்டுப் பாடவேறுபாடுகள் கண்டு ஒப்பாரும் மிக்காரும் இல்லா நிலையில் தமிழ்நூல்கள் வெளியிட்டுள்ளனர். அவர் காட்டியுள்ள பாட வேறுபாடுகளும், ஒப்புமைப் பகுதிகளும் அவர்தம் அயரா உழைப் பிற்குச் சான்றாக இலங்குவன. புறநானூற்றுப் பதிப்புக்கு, மூலப் படிகள் எட்டும், உரைப்படிகள் பதின்மூன்றும் பயன்படுத்தப் பட்டுள்ளன. எனினும் 'பார்ப்பார்' 'வழுவாய்' என்பவற்றுக்குப் பாடவேறுபாடுகள் காட்டப்பெற்றில; 'உளவே' என்னும் பாட வேறுபாடு மட்டும் காட்டப்பெற்றுளது. ஐயருக்குக் கிடைத்த படிகள் எவற்றிலும் இப் பாட வேறுபாடே இல்லையா? நாவலருக்கு இப் பாடவேறுபாடு எப்படிக் கிடைத்தது?

புறநானூற்றுச் சுவடிகள் தமிழகத்தில் மட்டுமா கிடைத்தன? ஈழத்திலும் கிடைத்தன: ஐயரவர்கள் பதிப்புக்கு, யாழ்ப்பாணம் திரு. சதாசிவப் பிள்ளை, திரு. த. கனக சுந்தரம்பிள்ளை, திரு. வி. கனக சபைப் பிள்ளை ஆகியோரின் மூலப்படிகளும், திரு. சி. வை. தாமோதரம் பிள்ளையிடம் இருந்த திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர் அவர் களின் மூலப்படியும், வண்ணை நகர் சுவாமிநாத பண்டிதரின் உரைப் படியும் பயன்பட்டுள்ளன. இப் படிகளை வழங்கியவர்களுள் சதாசிவம் பிள்ளை என்பார் ஆறுமுக நாவலர் அச்சுக் கூடப் பொறுப் பாளராக இருந்தவர். ஆதலால் தமிழ் உலகிலும், சைவ உலகிலும் அரிமாவென விளங்கிய நாவலர், ஒரே ஒரு பிழையைக் கண்டு பிடிக்கவும் இயலாத வகையில் எந்நூலையும் பதிப்பித்த பதிப்புக்கலை ஏந்தல் புறநானூற்றுச் சுவடிகளைத் தம் கைவயம் வந்திருந்த தையோ ஒப்பிட்டு ஆய்ந்ததையோ ஐயுற வேண்டுவதில்லை. அவர்கண்ட செப்பமான பாடம் சிதைந்துவிடக் கூடாது என்பதால் அதனை அடிக்குறிப்பாகக் காட்டினார். இவ்வாறே அவர் காலத்தில் வெளிவராத சிந்தாமணி முதலிய நூல்களில் இருந்தும் அவர் தக்க மேற்கோளை அவ்வவ் விடங்களில் அடிக்குறிப்பாகக் காட்டுவதைத் திருக்குறள் பதிப்பிலேயே காணலாம்.

இனி, நாவலர் அவர்களின் திருக்குறள் பதிப்பை ஐயரவர்கள் அறியாமல் இருந்திருக்க இயலாது. ஏன் எனில், அப் பதிப்புக்குச்

சிறப்புப் பாயிரம் வழங்கியவர்களுள் முதல்வர் பெரும் பேராசிரியர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள். மற்றையோரும் தியாகராசச் செட்டியார் முதலிய அவர்தம் மாணவர்களே. ஆகலின் 'குரவர்த் தப்பிய' என்னும் பாடத்தை ஐயரவர்கள் அறியாமல் இருந்திருக்க இயலாது. இருப்பினும் ஐயரவர்கள் அதனைக் காட்டிக்கொள்ள விரும்பவில்லை என்றே தெளிவு செய்ய வேண்டியுள்ளது. நிற்க.

புறநானூற்றுக்குச் சிறந்த விளக்கவுரை ஆராய்ச்சியுரை ஆகியவற்றுடன், 1947 இல் உரை வேந்தர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் ஒரு பதிப்பைக் கழக வழி வெளிக் கொணர்ந்தார். அப் பதிப்பில் 'குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' என்னும் பாடமும் "தந்தை தாயாரைப் பிழைத்த கொடுந்தொழிலை யுடையோர்க்கும்" என்ற உரையும் குரவர்த் தப்பிய என்பது பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்க்கும் எனத் திருத்தப்பட்டிருக்கிறது. இத் திருத்தம் பரிமேலழகர் காலத்தேயே செய்யப்பட்டுள்ள தென்பது திருக்குறள் உரையால் காணப்படுகிறது" என்று விளக்கமும் வரைகின்றார். ஆனால் அவர் பதிப்பிலும், 'வழுவாய்' 'வருவாய்' என மாறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இவை இவ்வாறு இருக்க, 'பார்ப்பார்' 'குரவர்' என்பவற்றுள் எது செவ்விய பாடமாக இருத்தல் வேண்டும் என்பதை நோக்கின் 'குரவர்' என்பதே நூலறிவுடையார்க்கு எளிதில் விளங்கும். 'ஆன்முலை' முதலிய அடிகளில் அமைந்த மோனை நலம், 'பார்ப் பார்த் தப்பிய' என்னும் பாடத்தில் இல்லை. 'குரவர்த் தப்பிய கொடுமை' என்பதில் இனிது பொருந்திக் கிடக்கிறது. அன்றியும் பொருளாலும் குரவர் என்பதே சிறக்கின்றது.

எவ்வகை அறங்களினும் தலையாய அறம் பெற்றோரைப் பேணுதல் என்பது வெளிப்படை; நம்மவர் சிறந்த பண்பாடும் கூட; "தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை" "தாய்சொல் துறந் தொரு வாசகம் இல்லை" "தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை" "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" "தந்தைதாய்ப் பேண்" என்பன நாம் குழந்தைப் பருவத்திலேயே கற்பித்து வரும் நன் மொழிகள். கோவலன் தன் குற்றமாகக் கண்ணகியாரிடம் கூறி வருந்தும்போது, "இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்" என்பதும், "தாயைப் பிழைத்தாலும் தண்ணீரைப் பிழையாதே" என்னும் பழமொழியும் குரவர்த் தப்புதல் குற்றத்தை நன்கனம் வெளிப்படுத்தும்.

"சிதைவகல் காதல் தாயைத்
தந்தையைக் குருவைத் தெய்வப்

பதவியர் தணரை ஆவைப்
　　பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கு முண்டாம்
　　மாற்றலாம் ஆற்றல் மாயா
உதவிகொன் றார்க்கென் றேனும்
　　ஒழிக்கலாம் உபாய முண்டோ?" (கம்ப. கிட்கிந்தை, 62)

என்னும் கம்பர் வாக்கின் தொடக்கமே 'குரவர்' விளக்கமெனல் வெளிப்படை. 'தாயைத் தந்தையைக் குருவை' என்பது குரவர்களை யல்லவோ விளக்குகின்றது! இதனைக் கருதின் நாவலர் சுட்டிய பாடமே தக்கது என்பது இனிது விளங்கும்.

பதிப்புப் பணியில் புகுவார் விருப்பு வெறுப்புகளுக்கு ஆட் படாமல் பணித் தூய்மையே அணியாய்ப் பூண்டு விளங்குதல் வேண்டும் என்பதும், தமக்கு முற்பட்டு விளங்கும் ஆராய்வாளர் கருத்துகளைக் கருத்தில் கொண்டு கடனாற்ற வேண்டும் என்பதும் கடைப்பிடியாகக் கொள்ளத் தக்கனவாம். (தொடரும்)

———

## ஈடுள்ள ஏடில்லை!

[தி. நா. அறிவுஒளி., க. மு., கல். இ.,]

### முகநிலை

எட்டுத் தொகைக்கோர் ஈடில்லை—அவைபோல்
எட்டுத் திசையிலுமோர் ஏடில்லை! (எட்டுத்தொகை)

### இடைநிலை

கட்டிப் பொன்னாகும் பாட்டெல்லாம்—உலகோர்
கண்ணின் மணியாகும் கருத்தெல்லாம்! (எட்டுத்தொகை)

### முரிநிலை

உள்ளம் உருக்கும் உணர்வமிழ்தம்—அன்பின்
உயிரை யியக்கும் அறிவமிழ்தம்!
அள்ளூஞ் சுவையின் அழகுஊற்றும்—தமிழர்
அறத்தின், அருளின் திருவாழ்வாம்! (எட்டுத்தொகை)

காலம் வெல்லும் பேரின்பம்—வாழ்க்கை
கனிந்த உணர்வின் பேரழகு!
ஞாலம் போற்றும் நாகரிகம்—நெஞ்சின்
நயத்தை வியக்கும் வேரழகு! (எட்டுத்தொகை)

குறிப்புப் பொருளைக் கொடுக்குந்தாய்—காதற்
கோவில் வளர்க்கும் அருள் வித்தாய்,
வெறிப்பை விலக்கும் அறத்தின்வேர்—ஆர்வ
வியப்பை விளைக்கும் இலக்கியத்தேர். (எட்டுத்தொகை)

# சங்க நூல்களில் முயிறு

(Weaver - ant in Sangam Literature)

[திரு பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

முயிறு எனும் ஒரு தனிப்பட்ட எறும்பைப்பற்றிச் சங்க நூல்கள் கூறுகின்றன.

"பழனப் பாகல் முயிறுமூசு குடம்பை
கழனி நாரை உரைத்தலிற் செந்நெல்
விரவுவெள் ளரிசியின் தாஅம் ஊரன்" —நற்றிணை 180

வயலருகிலுள்ள பலா மரத்தில் முயிற்றெறும்புகள் முட்டை யிட்டு மொய்த்துள்ள கூடுகளை நாரை உறிஞ்சுதலாலே அம் முயிறுகளும் அவற்றின் முட்டைகளும் சிவந்த நெல்லோடு கலந்த அரிசியுதிர்ந்ததுபோல் பரவும் என்று நற்றிணை கூறியுள் ளது. செந்நெல் முயிறு என்ற எறும்புக்கும் அதன் அரிசி எறும் பின் முட்டைகளுக்கும் ஒப்பிட்டுள்ளதாகக் கூறுவர்.

"பழனப் பாகல் முயிறுமூசு குடம்பை
கழனி யெருமை கதிரொடு மயக்கும்" —ஐங்குறுநூறு—99

பலா மரத்தில் காணப்படும் முயிறுகள் மூசும்கூட்டைப் பற்றி ஐங்குறுநூறு கூறியுள்ளது. இயற்கையில் எறும்பி னங்கள் பெரும்பாலும் புற்றில் வாழ்கின்றன. மரப்பொந்திலும், துளையிலும் வாழ்கின்றன. ஆனால், இனக்கூட்டு வாழ்க்கையினை உடைய தனித்த ஒருவகை எறும்புகள் இலைகளை ஒருங்கு சேர்த்துக் கூடாகத் தைத்துக் கூடுகட்டி வாழ்கின்றன. இந்த எறும்பினம் அரிதாகக் காணப்படுகின்றது. இந்த இன எறும்பு கள் பலா மரத்தில் கூடுகள் கட்டி வாழ்வதை நானே நேரில் கண்டிருக்கிறேன். நான் மாகியில் (Mahe) ஆட்சித் தலைவராக (Administrator) இருந்தபோது தர்மடம் என்ற தீவுக்கு ஆராய்ச்சி செய்ய விசைப்படகில் சென்றேன். அங்குள்ள சிறிய குன்றில் குறுங்காடு இருந்தது. அக்காட்டில் பலா மரங்கள் நிறைய இருந்தன. அந்த மரங்களில் முயிற்றெறும்புகளின் கூடுகள் நிறைய இருந்தன. நெருங்கியும் இருந்தன. எனக்குத் துணையாக வந்தவர் இந்த எறும்புக் கூட்டில் எனது உடல்படாதவாறு கொம்புகளை விலக்கிக் கூட்டிச் சென்றார். எறும்புக் கூட்டில் உடல்பட்டால் கூட்டமாகக் கொட்டும் என்றும், கடுமையான வலி தரும் என்றும் அவர் கூறினர். கூட்டமாகக் கொட்டும் தன்மை

இந்த எறும்புகளுக்கு உண்டு. இந்த எறும்புகள் இளஞ்சிவப்பானவை. ஆதலின் செந்நெல்லுக்கு ஒப்பிடப்பட்டுள்ளன. பதிற்றுப்பத்தில் செந்நெல்லுடன் ஒருவகைக் குளவிகளை ஒப்பிட்டிருப்பதை 'மே' திங்கள் செந்தமிழ்ச் செல்விப் பரலில் விளக்கியுள்ளேன்.

உலகிலேயும், இந்தியாவிலேயும் இலைகளைத் தைத்துக் கூடு கட்டி வாழும் ஒரே இன எறும்பு முயிறுதான். கூடுகட்டும்போது முட்டையிலிருந்து வந்த புழுவின் உடலிலிருந்து பட்டு நூலை எடுத்து இலைகளை நூலால் தைக்கின்றன. குஞ்சுப் புழுக்களை நூலுடைய நெய்யும் குழல்போல் விடுத்தும் வாங்கியும் முயிற்று எறும்புகள் பயன்படுத்துகின்றன. (The observation of Deflein and others had proved that the silk is provided by the larvae of the species concerned. They are held by the workers of the species and used as if there are shuttles in weaving the silken thread of the nest) நாரையானது முயிறு மூசு குடம்பையை உறிஞ்சுவதற்குக் காரணம் எறும்பின் முட்டையைத் தின்பதற்கு என்பதை உரையாசிரியர்கள் கூறவில்லை. இக்காலத்தில் உறிஞ்சுவது என்ற பேச்சு வழக்கிற்கு வழங்கும் பொருள் சங்க காலத்தில் இல்லை. ஆனால், சங்க காலத்தில் இவ்வழக்கு சிதறுவது என்று பொருளுடையதாகும். சில பறவைகள் எறும்பு முட்டைகளை விரும்பித் தின்னும் என்று அறிவியலறிஞர்கள் கூறியுள்ளனர். ஆனால், முட்டைகளைவிட அவற்றின் கூட்டுப் புழுக்களைச் சில பறவைகள் விரும்பி உண்ணும் என்று கூறுவர்.

சிறுபஞ்சமூலத்தில் முயிற்றெறும்புபற்றிக் கூறப்பட்டுள்ளது.

"தக்க திணையான் தவஞ்செல்வன் ஊண்மறுத்தல்
தக்கது கற்புடை யாள்வனப்புத்—தக்க
தழற்றண்மனைன் தோளான் அறிவில ளாயின்
நிழற்கண் முயிறாய் விடும்" —சிறுபஞ்சமூலம்-81

ஒருவன் மனையாள் அறிவிலாது ஒழுகின் அவன் வாழ்க்கை நிழலினிடத்து முயிறு கடித்தாற் போன்று ஆகிவிடும் என்று கூறப்பட்டுள்ளது. முயிற்றெறும்புகள் நிழலில் வாழ்பவை. இலைகளைக் கூடாகத் தைத்து உள்ளே வாழ்வன. வெயிலைப் பொறுக்காதவை. நிழலில் முயிற்றெறும்புகள் நன்றாகக் கடிக்கும். அதுபோல அறிவிலாது ஒழுகும் மனைவியைப் பெற்றவன் வீட்டிலேயே துன்புறுவான் என்று சிறுபஞ்சமூலம் கூறியுள்ளது. பலாமரத்தின் அடியில் நிழலில் படுக்கவைத்திருந்த குழந்தை

மேல் முயிற்றெறும்பின் கூடு விழுந்து எறும்புகள் கூடிக் கடித்துக் குழந்தை இறந்து போனதை நான் கேரளத்தில் கேள்விப்பட்டிருக்கின்றேன்.

கம்பன் தன் காவியத்தில் முயிற்று எறும்பைப் பற்றிக் கூறியுள்ளான்.

''முயிறலைத் தெழுந்து மரத்தின் மொய்ம்புதோள்
கயிறலைப் புண்டது கண்டு காண்கிலாது
எயிறலைத் தெழுமித முரக்க ரேழையர்
வயிறலைத் திரியலின் மயங்கி னார்பலர்'' —5—13—8

முயிற்றெறும்பு அலைத்து எழும் முதுமரம் போல் வலிய தோளையுடைய அனுமான் என்று கம்பன் கூறியுள்ளான். அனுமனுடைய தோள்கள் நாகபாசத்தால் பிணைக்கப்பட்டிருந்தாலும் அந்தத் தோள்கள் முயிறுகள் சினந்து கடிக்க அலையும் முதுமரம் போன்று ஊறு செய்யக்கூடியவை என்று கம்பன் கூறியுள்ளான். முயிறுகள் மரத்தின் இலைகளை நூலிழைகளைக் கொண்டு கட்டினதைப் போல அனுமன் கட்டப்பட்டிருந்தான் என்றும் உவமை கூறலாம். முயிறுகளை அரக்கராகவும் முதுமரத்தை அனுமனின் தோளாகவும் கொள்ளலாம்.

முயிற்றெறும்பை இக்காலத்தில் தமிழில் முசுட்டெறும்பு என்று அழைப்பர். முசுட்டை என்றும் அழைப்பர். முயிறு என்ற பெயர் பண்டைக் காலத்தில் முசிறு என்றிருந்திருக்க வேண்டும். 'முசு' என்ற சொல் கூட்டமாக மொய்ப்பதைக் குறிக்கும். 'முசு வண்டறையும் பொய்கை' என்று அப்பர் பாடியிருப்பதைக் கவனிக்க வேண்டும். ஆதலின் 'முசு' என்ற சொல் முதலில் கூட்டமாக மொய்ப்பது என்ற பொருளில் வந்திருக்கலாம். முசிறு என்ற பெயரில் 'று' என்பது ஊறு என்ற சொல்லின் இறுதியெழுத்தாகவும் இருக்கலாம். முசிறு என்ற பண்டைப் பெயரே சங்க காலத்தில் முயிறு என்று மாறிற்று என்று கருதலாம். முயிறு போன்று திடீரென்று சினங் கொளபவனை 'முசுடன்' என்று கூறுவதையும் காணலாம். முசிறு என்ற பட்டினம் 'முயிரி' என்று வழங்கியதற்குச் சான்று உள்ளது. சேர நாட்டில் கொடுங்களூரில் வந்து தஞ்சம் புகுந்த யூதர்களின் தலைவனுக 'இரப்பானுக்கு' (Reflan) கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டில் கொடுத்த செப்பேட்டில் "கோ சிரீபாற்கர இரவிவர்மன் திருவடி முயிரிக்கோட்டு இருந்தருளிய நாள்" (Epigraphica Indica iii p. 68) என்று கூறப்பட்டுள்ளது. முசிரி என்ற பட்டினம் முயிசிக்கோடு என்றழைக்கப்பட்டுள்ளது. மற்றும் 'முயிரிக்கோட்டு அஞ்சு

வண்ணம்' என்ற பெயரும் உள்ளது. ஆதலின் முசிரி என்ற சங்க காலப் பெயர் முயிறு என்று மாறினதாகத் தெரிகின்றது. முயிறிக்கோடு என்று அழைக்கப்பட்டிருப்பதால் முயிறு என்ற எறும்பு மலிந்த ஊராக இருக்கலாம். சங்க காலத்தின் பட்டினப் பெயர் முசிரி என்று இருந்தாலும் முசிறு என்ற எறும்பின் பெயர் சங்க காலத்திலேயே முயிறு என்று மாறிவிட்டதாகத் தெரிகின்றது. சென்னைப் பல்கலைக் கழக அகராதியில் முசிறு என்ற பெயருக்குக் கடுகடுப்புள்ள (Easily enraged and irritable person) என்று பொருள் கூறப்பட்டுள்ளது. இந்த எறும்பு எளிதில் சினங் கொண்டு அலைவதாகும். அது போன்ற தன்மையுடையவனை முசடன், முசுடு என்ற பேச்சு வழக்கில் அழைப்பதும் பொருத்தமே யாகும்.

முசுமுசுக்கை என்ற குறுமரம் உள்ளது. இதில் சுனை முட்கள் நிறைய உண்டு. இதன் காரணமாகவே 'முசு' என்ற பெயர் வந்ததாகத் தெரிகின்றது. இதன் இலையைக் கம்பளிப் புழுக்கள் விரும்பித் தின்கின்றன. பட்டுப்பூச்சிகளின் புழுக்களை இந்தச் செடியில் வளர்க்கின்றனர். இந்தச் செடியில் வளரும் புழுவை 'முசுக்கொட்டாம் பூச்சி' (கம்பளிப் பூச்சி) என்றும், நஞ்சுடைய சுனை மயிரையுடைய இந்தப் புழுவைத் தின்னும் ஒருவகைக் குயிலை முசுக்கொட்டாம் பூச்சிக் குருவி என்றும் தென்னார்க்காடு மாவட்டத்தில் அழைக்கின்றனர். முசுட்டெறும் பின் முட்டையிலிருந்து ஒருவகை மருந்துத் தைலம் எடுப்பதையும் மருத்துவ நூல்கள் கூறியுள்ளன. முசுட்டு முட்டைத் தைலம் என்ற பெயரில் மருந்து உள்ளது. மற்றும் முசுறுப் புல், முயிற்றுப் புல் என்ற பெயர்களையும் சென்னைப் பல்கலைக் கழக அகராதி கூறியுள்ளது. சேரர்களுக்கு உரிய துறைமுகப்பட்டினமான முசிறி என்ற ஊர் மேற்குக் கடற்கரையில் இருந்தது. இந்த முசிறி என்ற பெயரே முசிறு என்ற எறும்பின் பெயரால் வந்திருக்கவேண் டும். கேரளத்தில் இந்த முசிறு எறும்பு இயற்கையில் நிறையக் காணப்படுகின்றது. முசிறுகள் நிறைந்த ஊர் முசிரி என்றழைக் கப்பட்டது என்று கருதலாம்.

உரையாசிரியர்கள் பொதுவாக முயிறு என்ற பெயருக்கு "செவ்வெறும்பு" என்று பொருள் கூறியுள்ளனர். தமிழ் நாட்டில் முசுட்டெறும்பை முசுட்டை என்று அழைப்பர். மலையா ளத்தில் 'மீறு' என்றும் 'நீறு' என்றும் இந்த எறும்பு அழைக்கப் படுகின்றது. (KUI) கூயி மொழியில் 'முரவி', 'முகிறி' (Muravi, Mugiri' என்று அழைக்கின்றனர். மலையாளத்தில் 'மீறு' என்பது 'நீறு) என்றுஆகி இக்காலத்தில் வழங்குகின்றது. வட கேரளத்தில் தேவாங்கைப்பற்றி நான் ஆராய்ந்தபோது இந்த எறும்பின் முட்

டையைத் தேவாங்கு விரும்பித் தின்பதாக ஊர்மக்கள் கூறினர். நீற்றின் கூட்டுத் தேவாங்கு என்று கூறினர். நீற்றின் கூடு என்பது முசுட்டெறும்பின் கூட்டைக் குறித்ததாகும். இக் காலத்தில் மரத்தில் வாழும் கடிய வலியைத் தரும் எறும்பு வகைகளைக் குறித்து முசுட்டை என்ற பெயர் பொதுவாக வழங்கினும் சங்க காலத்தில் முயிறு என்ற பெயர் இலைகளைக்கொண்டு கூடுகள் தைத்து வாழும் ஒருவகைத் தனிப்பட்ட சிறப்புற்ற எறும்பைக் குறித்தே வழங்கினதாகும். உலகிலேயே எறும்பினத்தில் ஒரே ஒருவகை எறும்புதான் இவ்வாறு கூடுகட்டி வாழ்வதாகும். இதையும் நன்கு தெரிந்து இதன் முட்டைகளைப் பற்றியும் கூறிய சங்க நூற் புலவர்கள் போற்றுதற்குரியர்.

முசுட்டெறும்பை ஆங்கிலத்தில் Red weaver ant என்றும் அறிவியலில் Oecophyla Smaradgidine என்றும் அழைப்பர்.

**கருவி நூல்கள் :**

(1) A General Text Book of Entomology The English Language Book Society and Methuen & Co. Ltd., 11, New Felter Lane, E. C. 4. LONDON.

(2) Twelve Little House Mates, Karl von Frish—Nobel Laureate.

(3) Dravidian Etymological Dictionary—Dr. Burrow and Dr. Emenou.

(4) Malayalam—English Dictionary—Dr. Gundert.

———

## குழல்வாய், பெருங்குழல்

*துப்பாக்கியும் பீரங்கியும் அயல்நாட்டவர் கொணர்ந்த கருவிகள். அவற்றுக்குத் தமிழ்ப் பெயர்களை அமைத்து வழங்குகின்றது இராமப்பையன் அம்மானை. துப்பாக்கியைக் 'குழல்வாய்' என்றும், பீரங்கியைப் 'பெருங்குழல்' என்றும் வழங்குகின்றது. தமிழாக்கப் பணியில் தலைப்படுகிறதே, அது பாராட்டுக்கு உரியது அன்றோ!*

—கலைமணி.

# சிந்தி மொழியில் தமிழ்ச் சொற்கள்

[பன்மொழிப் புலவர் மு. ச. சிவம்,

தமிழ்ப் பேராசிரியர், வாசவிக் கல்லூரி, ஈரோடு.]

இந்திய அரசியலமைப்பில் குறிப்பிடத்தக்க இந்திய மொழிகளுள் சிந்தி மொழியும் ஒன்று என்று நடுவண் அரசு அறிவித்துள்ளது. இப்போது பழைய சிந்தி மொழி பேசுபவர் பெரும் பாலும் பாகித்தானத்திலேயே உள்ளனர். ஏறத்தாழ எண்பது இலக்கம் மக்கள் பாகித்தானப் பகுதியில் சிந்துமாநிலத்தில் சிந்தி மொழி பேசுகின்றனர். இந்தியாவில் அத் தொகையில் பாதியளவு மக்களே சிந்திமொழியைப் பேசுகின்றனர். ஆனால், சிந்தி மாநிலத்தில் பேசப்படும் சிந்திமொழியே இன்னும் தூய்மை குன்ருமல் விளங்குகிறது. இந்தியாவில் பேசப்படும் சிந்திமொழி ஆரிய மயமாக்கப்பட்டு வருகிறது. இந்தியாவில் சிந்தி பேசும் மக்கள் பெரும்பாலும் குசராத்து மாநிலத்திலும், மகாராட்டிர மாநிலத்திலும் உள்ளனர்.

சிந்துவெளி நாகரிகம் திராவிட நாகரிகமே என்று அறிஞர் ஈராசுப் பாதிரியார் முதல் பல்வேறு அறிஞர்களும் ஒப்புக் கொண்டுள்ளனர். சிந்துமாநிலத்தில் இக்காலத்துப் பேசப் பெறும் சிந்திமொழியில் ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ்ச் சொற்கள் உள்ளன என்று இப்போது பூனவில் உள்ள தக்காணக் கல்லூரியில் சிந்திமொழி அகராதியை உருவாக்கிவரும் டாக்டர் பார்சோ கீத்வாணி என்பவர் கூறியுள்ளார். அவர் அண்மையில் அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற அகராதிக்கலை பற்றிய கருத்தரங்கில் சிறப்புச் சொற்பொழிவாற்றினர். அவருடைய சொற்பொழிவிலிருந்து சில கருத்துக்கள் ஈண்டுத் தரப்பெறுகின்றன.

சிந்துமாநிலப் பகுதியில் (பாகித்தானத்தில்) பிராகுவி என்ற திராவிடமொழி பேசப்பட்டு வருவதைத் திராவிட மொழியியல் அறிஞர் அனைவரும் அறிவர். இன்னும் மங்பாரா, ஒட்ட முதலிய ஐந்து திராவிட மொழிகள் பேசுவோர் அப் பகுதியில் உள்ளனர். அம் மொழிகளைப் பதிவுசெய்து அவற்றின் முழுவடிவங்களையும் அறிவதற்கு இன்னும் மொழியியல் அறிஞர்கள் தொடங்கவில்லை.

பாகித்தானப் பகுதியில், குறிப்பாக மலைப்பகுதியில் வாழ்கின்ற சிந்தி மக்கள் பன்னெடுங் காலமாகப் பிறமொழிக் கலப்புக்கு -

ஆளாகாமல், தூய சிந்திமொழியைப் பேசி வருகின்றனர். சிந்தியில் எத்துணையோ தமிழ்ச் சொற்கள் சிறிது வடிவம் மாறி, ஆனால் பொருள் மாறுபடாமல் வழங்கப்பெற்று வருகின்றன.

சிந்திமொழியின் வரலாற்றை எழுதியுள்ள டாக்டர் அல்லோனா என்பவர் சிந்தி திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மொழியே என்று கூறியுள்ளார்.

ஊர்ப் பெயர்கள் :

'தண்டோ' என்று முடியும் இருபதுக்கு மேற்பட்ட ஊர்கள் பாகிஸ்தானச் சிந்துப் பகுதியில் உள்ளன. 'தண்டோ' என்றால் பாடிவீடு என்று பொருள். தமிழிலும் தண்டு என்பது படையைக் குறிக்கும் சொல்லாகவே உள்ளது.

ஆட்பெயர்கள் :

தமிழில் மக்கட் பெயர்களில் பெரும்பாலானவை 'அன்' விகுதி பெற்றுள்ளன. முருகன், செங்கோடன், கோவிந்தன் முதலிய எண்ணிலாத பெயர்கள் அன் விகுதியுடன் முடிகின்றன. சிந்தியிலும் அன் விகுதிபெற்ற ஆட்பெயர்கள் அளவில்லாதவை உள்ளன. எடுத்துக்காட்டாகச் சிந்தி மக்களிடையே ராமன், பீமன், சாமன், தாமன், ஆசன், ஈதன், சிவன், காமன் முதலிய பெயர்கள் வழங்கப்பெறுகின்றன.

நூற்றுக்கணக்கான சிந்தி மக்கள் 'பெருமாள்' என்ற பெயரைப் பெற்றுள்ளனர். சிந்திமொழிப் பண்டிதர்களுக்குக்கூடப் பெருமாள் என்ற சொல்லின் வேர்ப்பொருள் தெரியவில்லை.

எண்ணுப் பெயர்கள் :

சிந்தியில் 'படு' என்ற சொல் 'ஒன்று' என்ற பொருள் தரும். 'லெண்ட்' என்பது இரண்டு என்ற பொருளைத் தரும். 'மூன்' என்பது மூன்றினைக் குறிக்கும் சொல். 'நரி' என்பது நான்கினைக் குறிக்கும். 2, 3, 4 என்ற எண்களுக்குரிய பெயர்கள் ஏறக் குறையத் தமிழ்ச் சொற்களாகவே உள்ளன. ஆனால், ஐந்து ஆறு என்ற எண்களைக் குறிக்கும்போது சிந்திமக்கள் ஓர் எண் முன்னேடியாகச் சென்றுவிட்டனர். 'அறி' என்ற சொல் சிந்தியில் ஆறு என்ற எண்ணுக்குப் பதில் ஐந்து என்ற எண்ணைக் குறிக்கும். 'இரு' என்றசொல் 'ஏழு' என்ற எண்ணைக் குறிக்காமல் ஆறு என்ற எண்ணைக்குறிக்கும். 'ஆறு' என்ற எண்ணைப் பொறுத்தவரையில் சிந்திமக்கள் ஓர் எண் பின்தங்கி விட்டனர்!

அறி, இரு என்ற சொற்களை நோக்கும்போது ஆறு, ஏழு என்ற தமிழ்ச் சொற்களுடன் அவை தொடர்பு கொண்டிருப்பது எவர்க்கும் புலனாகாமல் போகாது.

உடலுறுப்புச் சொற்கள் :

சிந்தியில் 'மூகு' என்றால் முகத்தைக் குறிக்கும். நாகு என்பது நாக்கினைக் குறிக்காமல் மூக்கினைக் குறிக்கும். 'நிர்து' என்ற சொல் நூலைக் குறிக்கும். 'வாயி' என்ற சொல் வாயைக் குறிக்கும்.

உறவுப் பெயர்கள் :

சிந்தியில் 'அமா' என்ற சொல் அம்மாவைக் குறிக்கும். 'அப்பா' என்றால் அப்பாவைக் குறிக்கும். சிறு குழந்தைகளை அன்போடு அழைப்பதற்கும் 'அப்பா' என்ற சொல்லை பயன் படுத்தப்பெறுகிறது.

தமிழில் போலவே 'மாமா' என்ற சொல் சிந்தியிலும் அம்மாவின் தம்பி அல்லது அம்மாவின் அண்ணனைக் குறிக்கிறது. தமிழிற் போலவே 'தாத்தா' என்ற சொல் சிந்தியிலும் தாத்தாவைக் குறிக்கும்.

பிற துறைகளில்:

சர்க்கரையைக் குறிக்கும் 'கண்ட்ரு' என்ற சிந்திச் சொல் அதே பொருளைத் தரும் 'கண்டு' என்ற தமிழ்ச்சொல்லுடன் ஒற்றுமை பெற்றுள்ளது.

தாழ்ப்பாளைக் குறிக்கும் 'தாழ்' என்ற சொல்லுக்குச் சரியாகத் தாரி என்ற செசல் சிந்தியில் பயன்படுத்தப்படுகிறது.

சிந்திச் சொல் 'வச்' என்பதற்கும், தமிழில் வளம் என்ற பொருள் தரும் 'வசி' என்ற (சிலப்பதிகாரச்) சொல்லிற்கும் தொடர்பு காணப்படுகிறது. மீன் என்ற பொருள் தரும் சொல் சிந்தியிலும் 'மீன்' என்றே வழங்கப்பெறுவது வியப்பிற்குரியது.

இன்னும் தமிழுக்கும் சிந்தி மொழிக்குமுள்ள இலக்கணம், பழக்க வழக்கம் முதலியவற்றில் எத்துணையோ தொடர்புகள் உள்ளன. இவற்றைப் பற்றிய விளக்கம் வேண்டுவோர்,

Parso J. Gidwani,
Sindhi Dictionary Project, Deccan College, Poona-6.

என்ற முகவரிக்குத் தொடர்பு கொள்க.

———

# ஞா. தேவநேயரின் நற்றமிழ் இசை ஆய்வு

[பாவலர் வி. ப. கா. சுந்தரம்]

## 1: 0. இசைத்துறையில் தோடங்கி வளர்ந்த வரலாறு :

தேவநேயர் தம் வாழ்க்கைத் தொடக்கத்தில் சில கீர்த்தனை களைத் தமிழில் நயம்பட இயற்றி நல்கினார். பின்னர்ப் பண்ணோடு பாடும் துறையில் நெறியான பயிற்சி பெற்றார். மன்னார்குடி இராச கோபாலன் எனும் இசை வல்லாரிடம் இசை பயின்றார். தெலுங்குப் பாடல்களின் உருக்களிலும் (மெட்டுகளிலும்) நாடகப் பாடல்களின் உருக்களிலும் பாடல்கள் இயற்றியுள்ளார். தாமாகச் சீரிய இசை அமைக்கும் திறமை எய்தினார் என்பதற்குச் சான்றுகள் கிடைப்பின் நலமாகும். ''இசைத் தமிழ்க் கலம்பகம்'' எனும் இவரது நூலில் 303 பாடல்கள் பல உருக்களில் இயற்றப்பட்டுள்ளன. இந் நூலில் தமிழின் மாட்சி, இந்தி எதிர்ப்பு, அரசியல் முதலிய பொருள்பற்றிப் பண்ணிசைப் பாடல்கள் நயம்பட இயற்றியுள்ளார்.

பாவாணர் ஓரளவுக்கு யாழையும் முழவையும் இசைக்கக் கற்றிருந்தார். சில இடங்களில் வரவேற்புப் பாடல்களைத் தாமே பண்களில் பாடி அளித்த நிகழ்ச்சிகள் உண்டு. (செந்தமிழ்ச் செல்வி. பிப்ரவரி 81. பக். 272.)

## 1 : 1. பாவாணர் எனும் சொல்லின் பொருள் என்ன ?

பாவால் வாழுநர்—பாவாழுநர்—பாவாணர் என்பது. பாகவதர் என்னும் சொல்—இசையில் தேர்ந்தவரைக் குறித்துப் பெருவழக்கு நாடெங்கும் பெற்றிருந்தது. அச் சொல்லை நீக்கவும் தூய பழந்தமிழை வழக்குக்குக் கொணரத் தாமே தம் வாழ்க்கையில் அமைத்து முயன்றுள்ளார். வாணன் எனும் சொல்லை வாழுநன் எனப் பிரித்தனர். 'அம்பலவாணன்' என வழங்குதல் அறிக.

## 2 : 1. இசையியல் ஆராய்ச்சி:

பாவாணரின் பாடுதுறை அறிவும் பைந்தமிழ் அறிவும் சேர்ந்து அவரை இசைத்துறையின் இலக்கண ஆராய்ச்சியில் ஈடுபடுத்தின. நன்கு டன்ணாய்விலே சிலப்பு சொல்லும் டன்ணாய்விலே தாமே பெரிதும் முயன்று நன்கு கற்றுத் தேர்ந்தார். பிறர் பிறர் இசை ஆராய்ச்சிகளை எடைபோட்டுச் சரி தப்பு எனப் பார்க்கவும் ஒப்பிட்டுக்

காட்டவும், ஆய்வுகளின் முடிவுகளைச் சீர்தூக்கிப் பார்க்கவும் திறம் படைத்தவராக விளங்கினர். பெரும்பெரும் தமிழ்ப் புலவர்கள் முத்தமிழில் ஒன்றாய இசைத் தமிழில்—இசைத் தமிழ் இலக்கணத்தில் கற்றுத் தேராதிருப்பதால் இசைக் கல்லூரிகளில் எல்லாம் பாடுதுறை முற்றியவரே இசை இலக்கண ஆசிரியராக இருந்துவரும் அவலநிலை இன்று நாடு முழுதும் உள்ளது. செங்கல் அடுக்கும் கொத்தன் அறிவு வேறு; கட்டிடக்கலை—வரலாறு—முதலிய நுண்மாண் செய்தியறிந்த பொறியியல் வல்லுநர் வேறு. செங்கல் அடுக்கும் திறமுடைய கொத்தனைக் கட்டிடக் கலையின் உலக வரலாறு கற்பிக்க நிறுவுதல்போல—பாடுதுறையினரை இசையியல் கற்பிக்க நிறுவுதல்.

மேலும் பாடல் துறையில் தேர்ந்தவர் சிலர் இசையியல் துறை முதல்வரைச் சற்றுத் தாழ்வாக நினைப்பது—செங்கலடுக்கும் கொத்தனும், கதவு செய்யும் தச்சனும் பொறியியல் தலைமையைத் தாழ்வாக நினைப்பதை ஒக்கும். ஞா. தேவநேயர் தம் இசையியல் துறைக்குத் தேவையான அளவுக்குப் பாடுதுறையிலும் அறிவு பெற்றிருந்தார். பாவாணரின் இசையியல் ஆராய்ச்சியை இனி ஆராய்வோம்.

### 3 : 1. பாவாணரின் இசைத்துறைச் சொல் விளக்கம் :

பல்லவி, அநுபல்லவி, சரணம், தாளம், பாணி முதலிய சொற்களைத் தம் 'இசைத் தமிழ்க் கலம்பகம்' எனும் நூலின் முகப்பிலே விளக்கியுள்ளார். மேலும் கு. கோதண்டபாணியார் இயற்றியுள்ள 'பழந்தமிழிசை' எனும் நூலின்கண், இசையிலக்கணம் ஆய்ந்த பேரறிஞர்களைப் பற்றித் தம் கருத்துகளை அஞ்சாது வெளியிட்டுள்ளார். இவற்றால் பாவாணரின் இசைத் தமிழ் ஆராய்ச்சிப் புலமையைத் தெள்ளத் தெளிய அறிந்து கொள்ளலாம்.

### 3 : 2. பல்லவி எனும் சொல் பற்றி :

"பல்லவி எனும் சொல், வடமொழியில் இல்லை. எனவே இது தென் சொல். துணைப் பல்லவியாலும் பிற உறுப்புகளாலும் பல்லவி பன்முறையும் அவாவப்பெற்று நிற்பதால் பல் அவாவி எனும் சொல் பல்லவி என்று மருவி இருக்கலாம்" என்று கூறியுள்ளார் ("இசைத் தமிழ்க் கலம்பகம்" முகப்பு)

பல் அவாவி என்றது பல்லவி என மருவி இருக்கலாம் என்ற கருத்தை ஊகித்து உரைத்துள்ளார். ஆனால், இச் சொல் மேலும்

ஆராய்தற்குரியது. 'பல்லவம்'—என்பது துளிர் என்றும் முதலில் தோன்றுவது என்றும் பொருள் படுவது. தரவு என்பது முதலில் பாடற் கருத்தைத் தருவது. பல்லவியும் முதலில் பாடற் கருத்தைத் தருவது. பல்லவம் எனும் சொற்கும் பல்லவிக்கும் உள்ள தொடர்பை மேலும் விரிவாக ஆராய்ந்து தனிததுப் பெருங் கட்டுரையாக அமைப்போம். மேலும் பாவாணர் அநுபல்லவியைத் துணைப் பல்லவி என்றும், சரணம் என்பதை அடி, உருஅடி என்றும் கூறுதல் வேண்டும் என்று வழிகாட்டியுள்ளார்.

3 : 3. தாளம் பற்றி :

"ஆடுவோர் தாளினல் (பாதத்தினல்) தட்டுவது தாளம் என்று பெயர் பெற்றது" என்று பாவாணர் விளக்கியுள்ளது பெரிதும் ஏற்றற்குரியது. தாள் = அம் + தாளம். குதித்தாடுங்கால் தாள் (பாதம்) தரையில் படும் ஓசையால் தாளம் தோன்றியது. அச் சொல்லே தாளம் தோன்றிய கதையை உரைப்பது. புராண விளக்கம் :—சிவனடுங்கால், காறசிலம்பு கழன்று, மேலே சென்று தோளில் விழுந்து 'தா' எனும் ஓசையும், தொடையில் விழுந்து 'ள' என்னும் ஓசையும், தரையில விழுந்து 'ம்' எனும் ஓசையும் எழுந்தன. இவற்றைச் சேர்க்கத் 'தாளம்' என்று ஆயிற்று என மரபாக விளக்கி வருகின்றனர்.

பாவாணர் கூறிய விளக்கம், வெறும் சொல்லாராய்ச்சி மட்டு மன்று. 'தாளம்' குதித்தாடுவதினல் தோன்றியது என்பது உலக இசை வரலாறு கூறும் உண்மை. அதற்குப் பொருந்த அமைவது 'தாளம்' என்னும் சொல் விளக்கம்.

3 : 4 'பாணி' பற்றி :

பாணி என்பதைப் பாவாணர் மிகநன்கு விளக்கியுள்ளார். "பாடுவோர் கையினல் தட்டுவது பாணி"—என்று விளக்கி யுள்ளார். இது பெரிதும் பொருந்துவது. பாவாணரை வெறுப் பவர்கள்—இவர் விளக்கங்களைப் பற்றித் தம் கருத்து உரைப்பது இல்லை; வடசொல் ஆராய்ச்சியின் பெரும் பிழைகளை மனமெல்லாம் மகிழ்ந்து மெச்சிக்கொள்வார்கள். இவர்கள் இகழ்ச்சி கிடக்கட்டும். இனிப், 'பாணி' பற்றி ஆராய்வோம். பண்ணுதல் என்பது செய்தல். கையினல் பல வினைகளை—அவையாவன—தட்டுதல், எண்ணுதல், வீசுதல் முதலிய வினைகளைச் செய்தலால் பண்ணுதல்—பாணி என்று ஆயிற்று. பண் > பாண் > பாணி. மேலும் இதனைச் சிலப்பதிகார உரைச் செய்தி கொண்டும் உறுதிப் படுத்தலாம்.

"கொட்டும் அசையும் தூக்கும் அளவும்
ஒட்டப் புணர்ப்பது பாணி யாகும்"

என்று உரையின் பழம்பாடலால் கையால் பண்ணப்படுவது பாணி யாகும். சப்பாணி கொட்டல் எனும் வழக்கு நோக்கற்குரியது.

3 : 4 :—'ஆதிதாளம்' பற்றி :

'ஆதிதாளம்' என்பதனை 'முன்னைத்தாளம்' என்று குறித்துள்ளார். 'ஆதி' என்பதை வடசொல் என்று முதலில் கருதினர். பின்னர் நான் செந்தமிழ்ச் செல்வியில்—ஆதி தமிழ்ச் சொல் எனக் கட்டுரை வரைந்து அவரிடம் அதுபற்றிக் கருத்துரைக்கக் கேட்டேன். ஓர் அஞ்சல் அட்டையில் பொடி எழுத்தில் அது (Proto Dravidian word) முன்னைப் பழந்திராவிடச் சொல் என்று எழுதி ஒப்புதல் தெரிவித்தார். தேவநேயர் சொல்லாய்வுப் பனிமலை (இமயம்) ஆயினும் சிறு கூழாங்கல் கருத்துரைப்பினும் பொருந்துவதாயின், தம் முதன் முற்கருத்தை மாற்றிப், பிறர் பிற்கருத்தை ஏற்றுக்கொள்ளும் வான்பெரும் தெய்வ உள்ளம் படைத்தவர். அது> ஆது> ஆதி. ஆதி என்பது முதலில் தொலைவுக் கருத்தையும் பின்னர் அதனோடு தொடர்புடைய முதன்மைக் கருத்தையும் தருவது. ஆதி தாளத்தைச் சிலம்பின் உரையில் 'எட்டன் மட்டம்' என்று பண்டையோர் குறித்துள்ளமை அறியலாகும். எட்டன் மட்டம் எனும் சொல்லை வழக்குக்குக் கொண்டு வருவது ஏற்றதும் ஏற்றமும் ஆகும்.

4 : 1. இசை ஆய்ந்தோர் மு. ஆபிரகாம் பற்றி :

"இசை ஆய்ந்த பெருமக்களுள்—மு. ஆபிரகாம் பண்டிதர் காலத்தால் முதன்மை பெறத்தக்கவர். தஞ்சைப் பண்டிதர் ஆயப்பாலை, வட்டப்பாலை, பாலைத் திரிபு முறைகள் பற்றி நன்கு ஆராய்ந்து விளக்கியுள்ளார்" என்று பாவாணர், பண்டிதரை அளந்து அறிந்து பாராட்டியுள்ளார். ஆனால் மு. ஆபிரகாம் பண்டிதர் விரிவாக ஆராய்ந்த 24 அலகுமுறைக் கணக்குகளைப் பாவாணர் ஏற்றுக்கொள்ளவில்லை என்பது அறியத்தக்கது.

4 : 2. பொன்னுசாமிபிள்ளை பற்றி :

மதுரை நாகசுர மேதை பொன்னுசாமிபிள்ளை—தாய்ப்பண் 32 என்றும், கோவை வீடுகள் (ஸ்வர ஸ்தானங்கள்) பதினறு அல்ல, பன்னிரண்டே என்றும் வற்புறுத்தியுள்ளார். இச் செய்தி

களையும் பாவாணர் ஒப்புக்கொண்டு பாராட்டியுள்ளமை கவனித்தற்குரியது.

4 : 3. விபுலானந்தர் பற்றி :

"விபுலாநந்தர் விழுமிய ஆராய்ச்சியாளரேனும், அடிப்படை தவறுகக் கொண்டமையால் பல உண்மைகளைக் காண இயலாது போயினர்" என்று ஆய்ந்து தம் முடிபு உரைத்துள்ளார். அஃதாவது விபுலாநந்தர் பண்டைய குரல் இன்றைய சட்சம் அன்று என்று ஓர் அடிப்படை கொண்டு அதன் மேலே ஆராய்ச்சிக் கட்டிடத்தை எழுப்புகிறர். அடிப்படை தவருய காரணத்தால் பல இசை உண்மைகளைக் காண இயலாது போயினர் என்னும் கருத்தைப் பாவாணர் விளக்கியுள்ளார்.

4 : 4. இராமநாதர் பற்றி :

"இசை அணிகலம் (சங்கீத பூஷணம்) எஸ். இராமநாதனர் மயங்கா மரபின் இசைமுறை காட்டிக் குரலே சட்சம் என்னும் பழங் கொள்கையை நிலைநாட்டினர்" என்று அந்தணராகிய எஸ். இராமநாதரைப் பெரிதும் புகழ்ந்து பாராட்டியுள்ளார் பாவாணர். இதனல் நாம் அறிவது என்ன? தேவநேயர் அந்தணர்களை வெறுப்பவர் அல்லர் என்றும் தீய கோட்பாடுகள் எங்கு காணினும் கண்டிப்பவர் என்றும் நாம் தெள்ளிதின் அறியலாம். இதற்குப் பலப்பல சான்றுகள் உண்டு. மொழிஞாயிற்றின் உள்ளம் நடுநிலை நிற்பது; அறம் உரைப்பது; வழிகாட்டுவது.

4 : 5. கோதண்டபாணியார் பற்றி :

"கு. கோதண்டபாணியார் ஐந்திசை முறை, ஏழிசையிலினை ஆய்ந்து வருத்ததே என்றும்...—...பன்னீரிசை முறையும் அவற்றின் இடைவெளிகளான இருபத் தீரலகு முறையும் தொன்று தொட்டுவரும் தமிழிசையில் என்றும் கூறியுள்ளார்" என்று பாவாணர் பாராட்டியுள்ளார்.

இதுகாறும் கூறியவாற்ருல்—இன்றுவரை இசை ஆராய்ச்சியில் ஈடுபட்ட பெரியோர்களின் முடிபுகளைச் சீர்தூக்கி, இவை இக் காரணத்தால்—கொள்ளற்குரியன தள்ளற்குரியன என்று துணிந்து தம் துணிபு உரைத்து இசை ஆராய்ச்சிகளை நாட்டினர்க்கு நன்கு விளக்கியவர் நம் மொழிஞாயிறு. இங்கு எடுத்துக் காட்டிய பாராட்டுகளை 'பழந்தமிழிசை' [கழக வெளியீடு 975.) (1959)] எனும் நூல் மதிப்புரையில் தேவநேயர் விளக்கியுள்ளார்

இந்நூல் பல்லாண்டுகள் எனக்குக் கிட்டாமல் வருந்தி இருந்த போது தாமரைச்செல்வர் வ. சுப்பையா பெருந்தகை தம்முடைய சொந்தப் படிவத்தை எனக்குக் கொடுத்தருளினர்.

## 5 : 0. முடிபுரை

முத்தமிழில் இசைத் தமிழ் மூவாயிரம் ஆண்டு தொடர்ந்து மரபாகத் தமிழகத்தில் நிலவுவது; உலகில் பண்ணமைப்பில், தாள அமைப்பில், கொட்டுமுழக்குக் கணக்கில் ஈடு இணையில்லாது சிறந்தது. இசை இலக்கண அமைப்புகளை அறிவர் மு. வரதராசர், அறிவர் சுப. மாணிக்கம், அறிஞர் ஆண்டியப்பன், அறிவர் வேணுகோபால், அறிவர் தமிழண்ணல்... முதலியோர் அறிந்திருந்தாலும் தமிழாசிரியர்களிடையே இசையியல் அறிவையும், சிலப்பதிகார இசைச் செய்திகளையும் முறையாகப் பரப்ப எவ்விதச் செயல் திட்டமும் இதுகாறும் மலரவில்லை. எனவே—தமிழ்த் துறையினர் முத்தமிழில் ஒன்றான இசைத்தமிழ் இலக்கணம் அறிந்து, சிலப்பதிகாரச் செய்திகள் அறிந்து இன்புறத்தக்க செயல் திட்டங்கள் தமிழகத்தில் மலர இசை வடிவமான இறைவன் வழிகாட்டி அருள்வாராக.



## பிறப்பால் உயர்வு கொடுத்தல் ஆகாது

*ஊன் தின்னும் வகுப்பினரினும் அருளொழுக்க முடையராய்ச் சைவ உணவு கொண்டு சிவத்தையே வணங்கும் அன்பு மிகுந்து தூயராய் வருவாரைச் சைவராயிருப்பவர்கள் தம்முடன் சேர்த்துக் கொண்டு அவர்களோடு ஏதொரு வேறுபாடுமின்றி உண்ணல் கலத்தல்களைச் செய்தல் வேண்டும். கல்வியிலும் நுண்ணறிவிலும் சிவநேய அடியார் நேயங்களிலும் அருளொழுக்கத்திலும் சிறந்தார்க்கே உயர்வு கொடுக்க வேண்டுமே யல்லாமல் வெறும் பிறப்புப் பற்றி இவ்வியல்புகள் இல்லார்க்கு உயர்வு கொடுத்தல் ஆகாது.*

— மறைமலையடிகள்.

(*மறைமலையடிகள் அறிவுரைக் கோவை, பக். 201*)

# திராவிடர்கள்

[க. சி. கமலையா]

“மெசபட்டோமியாவிலும் எகிப்திலும் முதிர்ந்த நாகரிகம் நிலவிய ஏறத்தாழ அதே காலத்தில் சிந்துப் பகுதியிலுள்ள மொகஞ்சோதரோவிலும் பஞ்சாபிலுள்ள ஹரப்பாவிலும் நாகரிகத்தில் முன்னேறிய மக்கள் வாழ்ந்தார்கள் என்பதை 1932 ஆம் ஆண்டு அகழ்ந்தெடுக்கப்பெற்ற பொருள்கள் உணர்த்தின. அதுகாறும் இந்தியாவின் மிகத் தொன்மையான பண்பாடும் நாகரிகமும் வேதங்களில் காணப்படும் ஆரியர்களுடையனவே என்ற கருத்து நிலவிற்று. ஆப்கனித்தான்—இந்துகுஷ் வழியாக ஆரியர்கள் கி. மு. 2000—1500 ஆண்டுகளுக்குள் இந்தியாவுக்கு வந்தார்கள் என்று தெரிகிறது. முதலில் சிந்துப் பள்ளத்தாக்கின் மேற்பகுதியில் குடியேறிப் பின்னர் கங்கைப் பள்ளத்தாக்கின் மேற்பகுதியிலும், அதன் பிறகு கடல்வரை சென்றும் விந்திய மலையையும் நர்மதையையும் கடந்து தென் மேட்டு நிலம் (தட்சிண பீடபூமி) வரை ஊடுருவியும் தென் கோடி வரையும் போய் விட்டார்கள்,”[1] என்று ஆனந்த குமாரசாமி எழுதுகிறார்.

3500 ஆண்டுத் தொன்மை படைத்த வேத காலத்துக்குப் பின் வந்த இந்து மதம் அதற்கு முன்னர் 1500 ஆண்டுகள் வேரூன்றிய வேதகாலத்துக்கு முந்திய இந்திய சமயத்தின் தொடர்புடன் வாழ்விலும் சிந்தனையிலும் 5000 ஆண்டுகள் தொடர்பு அறுந்து போகாத பெருமையைப் பெற்றது. “கி. மு. 3000 ஆண்டுகட்கு முன்பு மெசபட்டோமிய தொன்மைப் பண்பாட்டுக் காலத்தில் செழித்து ஓங்கிய நகர வாழ்க்கையை ஒளிப்பதிவு செய்யும் நாகரிகம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு பண்டைய இந்தியப் பண்பாடுகள் குறித்த கருத்துக்களில் பெரிய மாறுதல்கள் காணப்பட்டன”[2] என்று பெஞ்சமின் ரௌலண்ட் வரைகிறார்.

1922 முதல் 1927 ஆம் ஆண்டுகள் வரை இந்தியப் புதை பொருட் பிரிவு அகழ்ந்த வேலைகள் பற்றி ‘மொகஞ்சதரோவும் சிந்து வெளி நாகரிகமும்’ என்ற நூலின் முகவுரையில் ஜான் மார்ஷல் எழுதுவதாவது :

“இன்று வரை ஆரியர்கள் வருவதற்கு முன்பு வாழ்ந்த மக்கள் அவர்களை வென்ற ஆரியர்களைக் காட்டிலும் நாகரிகங் குறைவானவர்கள் என்று கருதப்பட்டு வந்தது. அடிமையான—அவமதிக்கப்பட்ட இனமாதலின் ‘தாசர்கள்’ அல்லது ‘அடிமைகள்’

---

1. Ananda K. Coomara swamy : History of Indian and Indonesian Art.

2. Benjamin Rowland: The Art and Architecture of India.

என்று சொல்லப்பட்டார்கள். தோற்றத்திலும் அதே போழ்து அவர்களுடைய பேச்சிலும் வெள்ளை நிற ஆரியர்களினும் வேறு பட்ட கறுப்பு நிறமுள்ள தட்டை மூக்குடையவர்களென்றும் ரிக்வேதப் பாடல்களிலிருந்து தெரிந்துகொள்ள முடியும். அதே சமயத்தில் நிரம்பக் கால்நடைகளை வைத்திருந்தார்களென்றும், போர்த் திறமையுடையவர்களென்றும், பல கோட்டைகளில் வாழ்ந்தார்களென்றும், அங்கிருந்து எதிரிகளோடு போராடினார்க ளென்றும் ரிகவேதப் பாடல்கள் தெரிவிக்கின்றன. மனப்பக்கு வத்திலும் உடலுறுதியிலும் சமூக ஏணியிலும் மதக்கொள்கை களிலும் அவர்களை வெற்றி கண்ட ஆரியர்களிலும் தாழ்ந்தவர்கள் என்ற கருத்து மறுக்கப்படாமல் ஏற்றுக்கொள்ளப்பட்டு இந்திய நாகரிகத்தின் சாதனைகளில் அவர்கள் பங்கு ஏதுமில்லை என்று சொல்லப்பட்டு வந்தது.

“5000 ஆண்டுகட்கு முன்பு ஆரியர்கள் எவர் என்று தெரியாத காலத்தில் இந்தியாவின் பிற பகுதிகளில் இல்லாவிடினும் பஞ்சாபிலும், சிந்துவிலும் முதிர்ந்த தங்களுக்கே உரித்தான ஒரே படியான நாகரிகத்துடன் மக்கள் வாழ்ந்தார்கள் என்று ஒரு நொடியேனும் நினைத்துப் பார்க்காத காலமும் உண்டு. மெசபட்டோமிய—எகிப்து நாகரிகத்துக்கு ஒப்பான—சிலவற்றில் அதற்கும் மேம்பட்ட நாகரிகம் அவர்களுடையது. மொகஞ்சதரோ —ஹரப்பா அகழ்வாராய்ச்சிகள் ஐயத்திற்கிடமின்றி இதை நிரூபித் துள்ளன. இவ்வகழ்வுகள் கி. மு. 4000 முதல் 3500 ஆண்டுகள் வரை வாழ்ந்த சிந்துமக்கள் இந்தோ—ஆரியத் தாக்கத்தின் ஒரு கீற்றுக்கூட இல்லாத வளர்ச்சியுற்ற—மேம்பட்ட பண் பாட்டைக் கொண்டிருந்தார்கள். மொகஞ்சதரோவிலும் ஹரப்பா விலும் ஒன்றைத் தெற்றெனக் காண முடியும். இவ்விரண்டு இடங்களிலும் நாகரிகம் அப்போதுதான் குருத்துவிட்டது என்று சொல்லமுடியாது. ஊழிக்காலமாக இந்திய மண்ணில் பல்லாயிரக் கணக்கான மனித உழைப்பின் உறுதியைக் கொழுகொம்பாகக் கொண்டது அந் நாகரிகம்.’’

மொகஞ்சதரோவில் ஏழு தளங்களில் கட்டிடங்கள் காணப் படுகின்றன இன்னும் கீழே தண்ணீர் ஊற்றெடுக்கும் இடங் களில் மூழ்கியுள்ள தளங்களும் உள்ளன. டிராய், ஏதென்ஸ், ரோம் போன்ற நகரங்களுடன் ஒப்பிட்டுப்பார்க்கும்போது மொகஞ்சதரோவைப்போன்று திரும்ப நிர்மாணிக்கப்பட்ட நகரம் ஆயிரம் ஆண்டு வரலாறு படைத்திருக்க வேண்டும். மொகஞ்சத ரோவில் நிலவிய மாறுன நிலையில் தண்ணீரால் மூழ்கியே அழிவு ஏற்பட்டிருக்க வேண்டும். இதைக் கணக்கிலெடுத்துக்கொண்டு பார்த்தால் கி. மு. 2800 ஆண்டுக்கு முன்பே சிந்துவெளி

நாகரிகம் தழைத்திருக்க வேண்டும் என்பது மறுக்க முடியாதது. எனவே, கி. மு. 3250 முதல் 2750 வரை மொகஞ்சதரோவில் மக்கள் குடியிருப்பு இருந்தது என்று தற்காலிகமாகக் கருதப் பெற்றது. சிந்துப் பண்பாட்டின் தந்தையர் எவர்? அவர்கள் அங்குள்ள தொன்மைக் குடியினரா அல்லது வந்து குடியேறின வரா? அகழ்வாராய்ச்சிச் சான்றுகளோ வேறு சான்றுகளோ இல்லாததால் அவர்களை ஆரியரென்றோ சுமேரியரென்றோ கொள்ள முடியாது. மொகஞ்சதரோவில் காணப்பட்ட எலும்புக் கூடுகளில், 24 எலும்புக் கூடுகளையும் அவற்றின் பகுதிகளையும் ஆராய்ந்து பார்த்ததில் ஒரு பகுதி மெசபட்டோமியாவிலுள்ள கிஷ் (Kish) அல் - உபைத்(Al - ubaid), உர் (ur) என்ற இடங்களி லுள்ள மண்டை யோடுகளுடன் தொடர்பு உள்ளதாயும் மற்றொரு பகுதி தென்னிந்தியாவின் ஆதித்த நல்லூர் இடுகாட்டில் கிடைத்த மண்டை யோடுகளுக்கு நெருக்கமுள்ளதாயும் காணப்படுகின்றன. இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் சிந்து மாநிலத்தின் அமைப்பு இருப்பதாலும் வடக்கில் மலைகளால் பாதை தடைப் பட்டிருப்பதாலும் மெசபட்டோமியாவைப் போலவே மனித இனங்களின் பல கூறும் கூடுமிடமாயிருந்திருக்க வேண்டும். இந்தியத் துணைக்கண்டத்தில் தொடக்க ஆஸ்திரேலியப் பழங்குடியினரும் (Australoids) ஆசியாவின் தென் பகுதியின் மத்திய தரைப் பகுதியினரும் மேற்கு—கிழக்கு மலைப்பகுதி ஆல்பைன்களும் (Alpines) மங்கோலிய இனத்தவரும் கூடும் இடமாகச் சிந்துப் பகுதி இருந்திருக்க வேண்டும். இதுகாறும் கிடைத்துள்ள மண்டை யோடுகளை ஆராய்ந்ததில் மொகஞ்சதரோ வின் முன்பு சொன்ன நான்கு இனங்களும் அங்கு இருந்திருக்க வேண்டும். சிந்துப் பள்ளத்தாக்கு மக்கள் ஆரியர்களல்லர் என்பது கீழ்க் கண்டவற்றால் பெறப்படும்:

---

(1) வேதங்களில் சொல்லப்படும் இந்தோ—ஆரிய சமூகத் தினர் நகர வாழ்க்கையைப் பற்றிய செய்தி தெரியாதவராயும் மேய்ச்சல் தரைகளைத் தேடிச் செல்பவராயும் வேளாண்மையில் ஈடுபட்டவராயுமிருந்தனர். அவர்கள் வீடுகள் பெரும்பாலும் மூங்கிலாலானவை. அதற்கு மாறாக மொகஞ்சதரோ—ஹரப்பாவில் சுகாதார வசதிகளுடனும், குளியலறைகளுடனும் மற்றும் பல வசதி களுடனும் செங்கல்லால் கட்டப்பட்ட உறுதியான—திரம்பக் கட்டு மான இடமும் கொண்ட—நெருக்கமான மக்களைக் கொண்ட நகரங் களிருந்தன. வேதகாலத்து ஆரியர்கள் வில்லையும் அம்பையும் வேலை யும் ஈட்டியையும் கோடரியையும் தாக்க உதவும் ஆயுதங்களாகவும் பாதுகாக்கும் பொருள்களாக மண்டையோட்டுக் கவசங்களையும் நெஞ்சைப் பாதுகாக்கும் சட்டைகளையும் அணிந்தனர். சிந்து

மக்கள் தற்காப்புப் பொருள்களை அறிந்திலர். இந்தோ - ஆரியர் செம்பையும் வெண்கலத்தையும் பயன்படுத்தினர். பின்னர், வெள்ளியும் இரும்பும் பயன்படுத்தினர். சிந்து மக்கள் கல்லாலும் செம்பாலும் வெண்கலத்தாலும் ஆன ஏனங்களைப் பயன்படுத்தினர். அவை புதிய கற்காலத்தின் தொடர்ச்சியாகும். சிந்து மக்களுக்கு இரும்பைப் பற்றி ஏதும் தெரியாது.

(2) வேதகாலத்து ஆரியர்கள் புலால் உண்டார்கள். மீனைப் பற்றிய எந்தத் தகவலும் வேதங்களில் இல்லை. சிந்து மக்களுக்கு மீன் அன்றாட உணவாகும்.

(3) மொகஞ்சதரோ—ஹரப்பா மக்கள் குதிரையைக் கண்டதே யில்லை. வேத காலத்து ஆரியர்கள் வாழ்க்கையில் குதிரை முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது.

(4) வேதகாலத்து ஆரியர்களுக்குப் பசு வழிபடும் விலங்காக இருந்தது. சிந்து வெளி மக்கள் வாழ்க்கையில் காளை முதன்மை இடம் பெற்றிருந்தது. எருது உருவங்களும் எருது உருவம் பொறித்த பிற பொருள்களும் சிந்துவெளி மக்களிடையில் இருந்தன.

(5) வேதகாலத்து ஆரியர்களிடம் சிவனுக்கோ தாய்க் கடவுளுக்கோ இடமில்லை. சிந்து வெளி மக்களிடை இவை சிறந்த இடம் பெற்றிருந்தன.

(6) ஆரியர்களுக்கு அக்கினி (நெருப்பு) தலைசிறந்த தேவதையாகும். வீட்டு அடுப்பு அல்லது நெருப்பு எரியும் இடம் (அக்கினி குண்டம்) ஆரியர்களுடைய ஒவ்வொரு வீட்டிலும் இன்றியமையாதது. மொகஞ்சதரோ வீடுகளில் நெருப்புக் குழியே இல்லை.[3]

சுமேரியப் பண்பாடுகளுக்கும் மொகஞ்சதரோ—ஹரப்பா பண்பாடுகளுக்குமுள்ள பலவகையான ஒற்றுமைகள் காரணமாகச் சுமேரியர்களும் சிந்துவெளி மக்களும் இன உறவு உள்ளவரா என்பது ஆராய்தற்குரியது. பலுசித்தானிலுள்ள பிராகி பேசும் மக்கள் வெளிநாட்டுக் குடியேற்றத்தின் காரணமாக—சிறப்பாக ஈரானிலிருந்து மக்கள் குடியேறிய காரணத்தால் அவர்களுடைய இனத் தூய்மையைக் காத்துக்கொள்ள முடியவில்லை. தென்னாட்டுத் திராவிடர்கள் ஓரளவுக்குப் பெரிதும் நாகரிக வளர்ச்சியடைந்திருந்த சிந்துவெளி மக்களை ஒத்திருக்கிறார்கள். இலிங்க வழிபாடும் தாய்க்கடவுளைப் போற்றுதலும் பொதுவாக ஆரியர்களுடையனவும்—சிறப்பாகப் பிராமணர்களுடையனவும் தலைமைக்கு எதிர்ப்பும் சங்க நூல்களிலும் மற்றையத் தமிழிலக்கியங்களிலும் காணப்படும் சாதி முறை எதிர்ப்பும் இதற்கு ஆதாரங்களாகும்.

(தொடரும்)

3. John Marshall : Moherjo-daro and the Indus Civilization.

# மாணிக்கவாசகர் கோயில் கட்டினரா?

[பேராசிரியர், மறை. திருநாவுக்கரசு, சென்னை.]

முகவுரை: செந்தமிழ் மாமறையாகிய திருவாசகத்தை அருளிச்செய்த மணிவாசகப் பெருமான் தெய்வநிகழ் சான்றோராவர். "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்" என்ற அவர்தம் வாய்மொழியால் அவர் சிவமாம் நிலைபெற்றவர் என்பது துணிவு. இதனை வலியுறுத்தும் அப்பெருமான் அருளிய மற்றொரு திருப்பாட்டு.

*"அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே*
*பவமாயங் காத்தென்னை ஆண்டுகொண்ட பரஞ்சோதி*
*நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம் ஒழிந்து*
*சிவமான வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ"*

என்பதாம். இங்ஙனமாகச் சிவமாக்கி யருளப்பெற்ற மாபெரும்—ஒப்பற்ற—பெருந்தகையை "மணிவாசகர் அறிவினாற் சிவனே" என்று திருக்கோவையாரின் உரையாசிரியராகிய பேராசிரியர் கூறிய உறுதிஉரை உண்மையின் முழு உருவேயாகும்.

இறைநிலை எய்தற்காம் சீர்மிகு பெருந்தகையாரின் பிறப்பே தூய்மையும் நேர்மையுமாகததானே அமைந்திருத்தல் வேண்டும். "விளையும் பயிர் முளையிலே தெரியும்", "கருவிலே திருவுடையார்" என்னும் முதுரைகள் உண்மையே அன்றோ? அண்மைக் காலத்தே வாழ்ந்த தெய்வம்நிகழ் சான்றோர்களான வள்ளல் இராமலிங்க அடிகள், இராமகிருட்டிணர், மாமுனிவர் காந்தியடிகள் ஆகியோரின் இளமைக் கால—இடைக்கால வரலாறுகள் நம் கண் முன் காட்சியன்றோ?

இம் மேதகு பண்புகள் எல்லாம் அறிந்துதானே பாண்டியன் இப் பெருமானை, "முற்றுணர்ந்த அமைச்சரினும் முதலமைச்சர்" என (பரஞ்சோதி திருவிளையாடல்) ஆக்கிக்கொண்டான்!

அரசுத் துறைகளில் பணியாற்றும் மிக எளிய ஊழியருங் கூட ஒரு துறைக்காக உள்ள பொருளை வேறு ஒரு துறைக்குச் செலவிட ஒருப்பட மாட்டாரன்றோ? அதற்கு மாறாகச் செல விட்டால் அரசின் ஒறுப்புண்டு, வேலையும் போய்விடும், மானமும்—அழியும், பழியுமுண்டாம் என்ற எளிய செய்திகளை அறிவரே! நிலவரி வாங்கும் ஊழியர் ஒருவர் தாம் திரட்டிய பணத்தைக்

கருவூலத்தில் கட்டுவதன்றி மருத்துவமனை கட்டற்கும், ஏழை கட்குக் கல்வி, உணவளிக்கவும் முற்படுவாரா? இதை நினைவிற் கொண்டால்,

முதலமைச்சராம் நம் பெருமானுர் இச் சிறிய உண்மைகளை அறியாதிருப்பாரா? அறிந்தும்,

''ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்ருண்மைக்கு
ஆழி எனப்படு வார்''

''நன்ருகும் ஆக்கம் பெரிதெனினும் சான்ரோர்க்குக்
கொன்றுஆகும் ஆக்கம் கடை''

''கெடுவல்யான் என்ப தறிகதன் நெஞ்சம்
நடுஓரீஇ அல்ல செயின்.''

இவ்வொழுக்கங்கட்கு மாருக நடப்பாரா?

இவ்வடிப்படை உண்மைகளை எல்லாம் மறந்தோ, நினைவு கூராமலோ, ஆராயாமலோ பெருமானுடைய வரலாறு பற்றிப் பொதுமக்கள் கூறிவந்த செவிவழிச் செய்தியை உண்மை எனக் கொண்டு என்றும் அழியா எழில் இலக்கியமாம் கடவுள் மாமுனி வரின் புராணம், வேப்பத்தூரார் திருவிளையாடல், பரஞ்சோதி முனிவர் அருளிய திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் முதலாம் நூல்கள் தோன்றின. அத் தீஞ்சுவை மிக்க காப்பியங் களின் ஆசிரியர்கள் பெருமானுர், பாண்டியன் குதிரைகள் வாங்கத் தந்த பொருளைக் கொண்டு திருப்பெருந்துறையில் திருக்கோயில் பணிகளுக்குச் செலவிட்டார் என்று பாடிவிட்டனர்.

இப் பெருங் கவிஞர்கள் யாவரும் பெருமானுர் காலத்தவரல்லர். பெருமான் காலத்திற்குப் பல நூற்ருண்டுகட்குப் பின் தோன்றிய வர்கள். பெருந்தகையின் காலம் மூன்ரும் நூற்ருண்டு என்பதே மறைமலையடிகள், கா. சு. பிள்ளை முதலாம் பேரறிஞர்களின் கூற்ருகும்; எழுத்தாகும். இவ் வுண்மையை உணரவேண்டு வோர் மறைமலை அடிகளார் யாத்த மாபெரும் நூலாகிய ''மாணிக்க வாசகர் வரலாறுங் காலமும்'' என்னும் பெருநூலைப் படிப்பார்களாக. ஆயிரம் பக்கங்களைக் கொண்ட அந்நூலின் ''காலம்'' பற்றிய ஆராய்ச்சி மட்டும் எழுநூறு பக்கங்களாகும்.

மூன்ரும் நூற்ருண்டன்று, பத்தாம் நூற்ருண்டு என்னும் அறிஞர்கள் கூட, பெருமானின் வரலாறு பற்றிய மேற்கூறிய நூல்கள் ஏறத்தாழ 11, 12ஆம் நூற்ருண்டில் தோன்றியவை என்பதை ஒப்பியுள்ளனர். பெரியோர்கள் வாழ்ந்த காலத்திலேயே

எழுதப்பட்ட வரலாறுகளில் கூடத் தவறுகள் ஏற்பட்டுவிடுகின்றன. சான்ருக யான் எழுதிய எந்தையார் வரலாற்றில், அவர் பிறந்த வீடு, நாகப்பட்டினத்தில் இடையர் தெருவில் 19ஆம் எண் உடையது என்று எழுதியுள்ளேன். ஆனால் அதன் பின் வந்த கட்டுரைகளிலும், சிறு நூல்களிலும், பாடநூல்களிலும் பலர் அடிகள் பிறந்தஊர் காடம்பாடி என்று எழுதியுள்ளனர். இவ்வாறே அவர் வரலாற்றில் நிகழாச் செய்திகளும், நிகழ்ந்தவற்றில் திரிபுகளும் மாறுபாடுகளும் நிறையக் கூறக் கேட்கின்றேன். வியப்படைகின்றேன்.

நம்நாட்டு மாபெருந் தலைவர் சவர்கலால் நேரு தம் வாழ்க்கை வரலாற்றில், "எம் குடும்ப உடைகள் பாரிஸ் நகரில் சலவை செய்யப்பட்டு வருகின்றன என்று எங்கும் பேசப்படுகின்றது. நம்பப்படுகின்றது. சற்றும் எண்ணிப் பாராது எங்கள் குடும்பத்திற்குப் பெருமை காட்டும் ஆவலால் இவ்வாறெல்லாம் கதைகள் கட்டப்படுகின்றன" என்று எழுதியுள்ளார்.

நாளேடுகள் முதலிய வசதியுள்ள காலத்திலேயே இப்படியென்ருல், இவ் வசதி ஏதுமில்லா அக்காலத்தில் வரலாறுகளில் இல்லாத பொல்லாத செய்திகள் இடம் பெறுதல் இயல்புதானே! வேண்டுமென்று செய்யப்படும் தவறுகள் அல்ல இவை. ஆன்ருேரைச் சிறப்பிக்க அறிவுக்கும் வாழ்வியலுக்கும் பொருந்தாத கற்பனைக் கதைகள், வரலாறுகள் கோடி கோடியாகத் தோன்றியது இவ்வாறே.

இராமாயணம், பாரதம், கந்தபுராணம் முதலாம் நல்லொழுக்கங்களைப்—பண்பாடுகளை மாந்த இனம் உய்ய நற்கவிஞர்களால் எழுதப்பட்ட கற்பனைக் கதைகளை நூற்றுக்கு நூறு உண்மை எனப் போற்றி வழிபடும் நல்லோர்கள் நூறாயிரக் கணக்கில் கோடிக் கணக்கில் உள்ளாரன்ருே?

இராவணனுக்குப் பத்துத் தலைகள், முருகப் பெருமானுக்கு ஆறுமுகங்கள், விநாயகருக்கு ஆனை முகம், அனுமார் குரங்கு, சாம்பவான் கரடி என்றெல்லாம் காவியங்களில் காண்கின்ருேமே! இவற்றில் உள்ள தத்துவ உண்மைகளை மாந்தர் பெரும்பாலர் ஒப்புவதில்லை. ஆயின் அக் கதைகளில் கண்ட யாவையும் உண்மைகளே, நடந்தவைகளே என்று எண்ணுகின்றனர்; நம்புகின்றனர்; வழிபடுகின்றனர். மேலோர் எழுதிய நூல்களில் எழுதியவை யாவும் உண்மைகளே என்ற எண்ணம் பத்திமை மிக்க மக்களிடையில் உண்டன்ருே?

மணிவாசகர் பற்றிய புராணங்களில் கண்ட செய்திகள், நிகழ்ச்சிகள் யாவும் உண்மைகளே என்று அறிஞர்களும் நம்பு

கின்றனர். இவற்றுக்கு அகச்சான்றுகள் பொருந்திய புறச்சான்றுகள் உள்ளனவா, அவை அறிவிற்குப் பொருந்தியனவா என்று கூட அவர்கள் ஆராய்வதில்லை; எழுதுவதில்லை; பேசுவதில்லை. இம்முறையில் பெருமான் அரசன் தந்த பணத்தைக் கொண்டு கோயில் திருப்பணிகள் செய்தார் என்றும், அவ்வாறு செய்ததில் குறை ஒன்றும் இல்லை என்றும் எழுதியுள்ளனர், பேசினர், பேசுகின்றனர்.

அரசன் குதிரை வாங்கத் தந்த பெரும் பொருளை வானனைய தம் பெரும் பத்திமையால்—தம்மை மறந்த நிலையில் கோயில் பணிகளுக்குச் செலவிட்டார் என்று அமைதி கொள்கின்றனர். அம்முறையால் பெருமானுக்குப் பழி இல்லை என்று கூறவேயாம்.

இப் பழிதரும் செய்திக்கு எவ்வகையான சான்றும் இல்லை என்பதை ஒரு சிறிது விளக்கி—மாசற்ற மாணிக்கமே மணிவாசகர் என்ற உண்மையினை அவர்தம் வாழ்க்கை வரலாருகத் திகழும் திருவாசகப் பாடல்களின் அகச்சான்றுகளைக் கொண்டு நிறுவ்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். அறிஞர்கள் இதைப் படித்து மணிவாசகப் பெருந்தகையின் தெய்வ மாண்பை யாண்டும் கொண்டாடுவார்கள் என்று நம்புகின்றேன்.

பரஞ்சோதியார் திருவிளையாடல் தி. பி. 15ஆம் நூற்ருண்டுக்கு முந்தியதன்று, பெருமான் வரலாற்று நூல்களை யாத்தவர்களில் இவரே இறுதியானவர். இப் புலவர் பெருமான் வாசகரின் வரலாறு பற்றி முந்தை ஆசிரியர்களின் கூற்றையே 90% பங்கு ஏற்றுக் காப்பியம் செய்தருளினர். அதில் பெருமான் அரசன் தந்த பொன்னைத்தாம் திருப்பெருந்துறையில் அவனருள் பெற்ற பின்பு எவ்வாறு கோயில் திருப்பணிகளுக்குச் செலவிட்டார் என்பதைத் தம் நூலுள் வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலத்தில்,

"வள்ளல் வாதவூர் முனிகளும் மன்னவன் பரிமாக்
கொள்ள நல்கிய பொருளெலாம் குருந்தில்வந் தாண்ட
பிள்ளை வான்மதிச் சடைமுடிப் பெருந்துறை மறையோர்க்கும்
உள்ள வாதரம் பெருகமுன் வேண்டியாங் குய்ப்பார்."

(63)

"சிறந்த பூசைக்கும் திருவிழாச் சிறப்புக்கும் செல்வம்
நிறைந்த ஆலயத் திருப்பணித் திறத்துக்கும் நிரப்பி
அறந்த வாதபே ரன்பர்க்கும் செலுத்திஅத் தலத்தே
உறைந்து அவாவற இன்னணம் ஒழுகு நாள் கழிப்பார்"

(64)

என்று பாடியுள்ளார். (தொடரும்)

# கரிவலம்வந்தநல்லூர் பால்வண்ண நாதர்

[தி இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்

இணைப்பதிவாளர், தனி அதிகாரி, திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கி (வரையறை); திருநெல்வேலி]

சங்கரன் கோயிலினின்றும் திருவில்லிபுத்தூர் செல்லும் பெருவழியில் "நாண்மலர்சேர் தடங்கொண்ட வாவி புடைசூழ்ந்த கருவை" எனப்பெற்ற கரிவலம்வந்த நல்லூர் என்ற ஊர் உள்ளது. இதனைத் "தண்டமிழ்த்தென் கருவாபுரி" என்றும், "பாண்டியரேத்தக் கருவாபுரி" என்றும் திருக்கருவைக் கலித்துறையந்தாதியிலும், "முத்தமிழ்க் கருவை" என்றும், "செந்தமிழ்க்கருவையம் பெரும்பதி" என்றும், 'தெள்ளு செந்தமிழ்க் கருவை' என்றும் திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதியிலும், "தமிழ்க் கருவை" எனத் திருக்கருவை வெண்பா வந்தாதியிலும் வரதுங்க பாண்டியன் என்ற பிற்காலப் பாண்டிய மன்னன் சிறப்பிக்கின்றான்.

"மிளிரும் புன்சடைமேல் வெண்திங்கள் சூடிய விகிர்தனின்" மேனியைக் குறிப்பிடும்போது தம்பிரானின் தோழராம் சுந்தரர்,

> "சந்தித் தடமால் வரைபோல் திரைகள் தணியாது
> இடறுங் கடலங் கரைமேல்
> அந்தித்தலைச் செக்கர்வானே ஒத்தியால்"

என்று அந்திவானத்துடன் ஒப்பிடுகிறார். தாண்டகவேந்தராம் அப்பர் அடிகளோ,

> "செக்கரொளி பவளவொளி மின்னின் சோதி
> செழுஞ்சுடர்த்தீ ஞாயிறெனச் செய்யர்"

எனச் செந்நிறம் கொண்டவராகக் கூறுகிறார். வரதுங்கபாண்டியன் தனது திருக்கருவைக் கலித்துறையந்தாதியில்,

> "செய்யன் கரியமிடற்றன் வெண்ணீற்றன் செம்பாதிபச்சை
> மெய்யன் செழும்பொற் சடாடவியான் வெவ்வனவெடுத்த
> கையன்"

எனச் சிவபெருமானின் திருவுருவை விதந்து உரைக்கின்றார். பால்நிற வண்ணமாக எங்கும் குறிப்பிடப்படவில்லை. "பால்வெண்ணீற்றன்" என்றுதான் குறிப்பிடப்படுகிறான். "செந்தமிழ்க் கருவையில்" கோயில் கொண்டுள்ள இறைவனின் பெயர் மட்டும் பால்வண்ணநாதர் அன்று; திருமேனியும் பால்போன்று வெண்மையாக உள்ளது. பொதுவாக இலிங்கத் திருவுரு கருமையாகத்தான்

எங்கும் காணப்படும். இந்தத் திருக்கோயிலில் இது வெண்மை யாக இருப்பதை இதன் தனிப்பெருஞ் சிறப்பாகக் கருதலாம். கடலைக் கடைந்து அமுது எடுத்தபோது வானவர்களால் தான வர்கள் வஞ்சிக்கப்பட்டனர். தானவர்கள் தாங்களும் அழியாத் தன்மை அடைய வேண்டி இங்கு பாற்குளத்தைத் தோற்று வித்தனராம். தானவர்கள் அழியாத்தன்மை அடையக்கூடாது என வானவர்கள் வேண்ட, இறைவன் பாற்குளத்தில் மூழ்கி எழுந்தானும். அதனல் அவன் நிறம் பால்வண்ணமாகி விட்ட தாம். பாற்குளம், நீர்க்குளம் ஆகிவிட்டது எனக் கோயிற்புராணம் கூறுகிறது. இலிங்கத் திருவுருவின் நெற்றியில் சந்தனப் பொட்டிற்குப் பதிலாகப் பெரிய வெண்பொட்டுக் காணப்படுகிறது. மேலும் திருமேனி முழுவதிலும் மேடும் பள்ளமும் வட்ட வட்டமாக உள்ளன. மேடான பகுதியில் பலாப்பழத்தின்மேல் உள்ள முள் போன்ற குமிழ் தென்படுகிறது. காவிநிறத்தில் ஆடையும் இயற்கை யாக அமைந்துள்ளது. இத்தகு காட்சி வேறு எங்கும் காண்டற் கரிய ஒன்றும்.

இங்குள்ள மூலவர் தேய்ந்து காணப்படுகிறர். இதற்குரிய காரணத்தை வரதுங்கபாண்டியன் தனது திருக்கருவை வெண்பா அந்தாதியில்,

> "ஏறுபட்டுக் கல்லால் இருஞ்சிலையால் ஏற்றுண்டு
> மாறுகட்ட மாற்றல் அடியுண்டு—மூறுபட்ட
> வாதையாலோ கருவை வாணனே பொன்மேனி
> பாதியாய்த் தேய்ந்தாய் பகர்"

எனக் கற்பிக்கிறர். சாக்கியநாயனர் கல்லால் அருச்சித்தது பஞ்சவரில் பார்த்தன் வில்லால் அடித்தது போன்றவற்றை இலிங்கத்திருவுரு தேய்ந்தமைக்குக் காரணமாகக் குறிப்பிடுகிறர்.

இங்குள்ள செப்புப் படிமங்களில் குறிப்பிடத்தக்கது இலிங் கோற்பவ வடிவமாம். அயன், அரி, அரன் என்ற மூவரில் அரனே முழுமுதற் பொருள் என்பதை வலியுறுத்தும் வடிவம் இது. பொதுவாக இலிங்கோற்பவ வடிவம் திருக்கோயிலில் கருவறைக்குப் பின்னல் காணப்படும். இத் திருவுருவின் சிறப்பினைத் திருஞான சம்பந்தப்பெருமான் தம்முடைய பதிகங்களில் ஒன்பதாவது பாட லில் சிறப்பித்துக் கூறுகிறர். இங்கு இந்த வடிவம் செப்புத் திருமேனியாக உள்ளதைச் சிறப்பாகக் கொள்ளலாம். அருகே யுள்ள சங்கரன் கோயிலில் அம்மை ஆடிமாதத்தில் தவம் செய்து இறைவனை அடைந்தாள். அஃது "ஆடித்தவசு" என்ற பெரு விழாவாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இந்தத் திருக்கோயி லில் இறைவி ஆவணி மாதத்தில் இறைவனை நோக்கித் தவம்

இருக்கிருள். இஃது இங்கு "ஆவணித் தவசு" என்ற விழாவாகக் கொண்டாடப்படுகிறது. அந்நாளில் இறைவன் இறைவியின் தவத்திற்கு மகிழ்ந்து இலிங்கோற்பவ வடிவில் இறைவியின் முன் தோன்றுகின்றான். இவன் முகலிங்கன் என அழைக்கப்படுகின்றான். வரதுங்க பாண்டியன் தன் அந்தாதிகளில் "முடைத்தலையிற் பலிகொள்ளு முகலிங்கா" என்றும், "மூன்றுலகந் தொழுதேத்து முகலிங்கா" என்றும், "முடித்ததண்பிறை வேணியு முகலிங்கன்" என்றும் உள்ளம் உருகி ஊறிக்கசிந்து பாடியுள்ளான்.

பராசத்தி பீடம் இந்த ஆலயத்தில் காணவேண்டிய ஒன்று. சத்திதான் முழுமுதற்பொருள்; சத்தியினின்றே முத்தொழில் புரியும் மூவரும் தோன்றினர் என நம்புவது சாக்தம் என்னும் சமயம். இஃது இந்து மதத்தின் அறுவகைச் சமயங்களில் ஒன்று. இதன் அடிப்படையில் ஆங்காங்கே பராசத்தி பீடங்கள் அமைக்கப்பெற்று, சத்தி வழிபாடு நடைபெற்று வருகின்றது. மொத்தம் 64 பராசத்தி பீடங்கள் இருப்பதாகத் தெரிகின்றது. நெல்லை மாவட்டத்தில் இங்கு தவிரக் குற்றாலத்திலும் பராசத்தி பீடம் ஒன்று அமைக்கப் பெற்றுப் பூசனையில் இருந்து வருகின்றது.

இலக்குமணலிங்கம் இந்தத் திருக்கோயிலில் காணவேண்டிய மற்றொன்று. இராமபிரானுக்கு, இலங்கையர்கோன் இராவணனைக் கொன்றதால் 'பிரமகத்தி' என்ற தீவினை ஏற்பட்டதாம். இராமேசுவரத்தில் சிவலிங்கத்தை வழிபட்டு இதைப் போக்கிக் கொண்டதால், அங்குள்ள இலிங்கம் இராமலிங்கம் எனப் பெறுகின்றது. செந்தமிழ் நூல் விரித்தோனும் முருகன் சூரபன்மனைக் கொன்றதால் ஏற்பட்ட பாவச் செயலைக் (பிரமகத்தி தோடம்) கோவை மாவட்டம் திருமுருகன்பூண்டி என்ற தேவாரப்பாடல் பெற்ற தலத்தில் சிவனை வழிபட்டுப் போக்கிக்கொண்டானும். எனவே அங்குள்ள இலிங்கம் 'திருமுருகநாதர்' எனப்படுகின்றது. இராவணன் மைந்தன் இந்திரசித்தை இலக்குமணன் கொன்றதால், அவனுக்கு 'பிரமகத்தி' என்ற தீவினை ஏற்பட்டதாம். அதைப் போக்க அவன் இங்கு சிவலிங்கத்தைப் பூசித்தானும். எனவே இஃது இலக்குமண இலிங்கம் எனக் கூறப்படுகிறது.

முகம்மதியர் படையெடுப்பால் இரண்டாம் பாண்டியப்பேரரசு வீழ்ச்சி உற்றது. அதன் பின் பாண்டிய அரசமரபைச் சேர்ந்தோர் திருநெல்வேலி, தென்காசி, கரிவலம்வந்தநல்லூர் ஆகிய திருவூர்களைத் தங்கள் தலைநகர்களாகக் கொண்டு ஆட்சிபுரிந்தனர். அவர்கள் பிற்காலப் பாண்டியர் எனப்பட்டனர். அவர்களில் வரதுங்கபாண்டியன் என்பான் கி. பி. 1588 இல் அரியணை ஏறினன். அவன் கரிவலம்வந்தநல்லூரைத் தலைநகரமாகக் கொண்டு கோலோச்சியதாகத் தெரிகிறது. அவனை 'வில்லவனை

வென்முன்' என்றும், 'வல்லம் எறிந்தான்' என்றும் தென்காசியில் உள்ள ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.

சிவனை முழுதும் மறவாத சிந்தையுடையவன் வரதுங்க பாண்டியன். ''கண்கொண்டு பார்த்த இடந்தோறும் தோன்றும் கருவைப்பிரான்'' என்றும்,

''பாரிடஞ் சூழ்வரத்தான் பலிகொண்டுந் தன்பாதமலர்
சேர்அடி யார்க்குப் பெருவாழ்வு அளிப்பான்''

என்றும் சிவனைப் போற்றுவதினின்றும் இவனது சிவபத்தி தெளிவாகத் தெரிகிறது. ''திருவாசகத்திற்கு உருகார் ஒருவாசகத்திற்கும் உருகார்'' என மாணிக்கவாசகப் பெருமானின் திருவாசகத்தை அறிஞர்கள் போற்றுவார்கள். திருவாசகத்தைப் போன்ற இம் மன்னனின் அந்தாதிகளைப் படிப்போர் மனம் நெக்குருகிக் கசிந்து இறைவன்பால் ஒன்றிவிடும். எனவே இவை ''குட்டித் திருவாசகம்'' எனப் போற்றப்படுகின்றன. அந்தாதிகளைத் தவிர இம் மன்னன் பிரமோத்தரகாண்டம் என்ற நூலையும் இயற்றியுள்ளான்.

ஐம்பெரும் பூதங்களும் இறைவனின் வடிவங்கள் என்பது திருவருட் செல்வர்களின் திருவாக்காம். இதையே வரதுங்க பாண்டியன் தனது திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதியில்,

''ஆதவன் மதிபார் அனல்வெளி புனல்கால் அருமறை யெச்சனென்று
பேதமாம் உருவாய் அருவமாய் நிறைந்த பெற்றியான்'' [எட்டுப்

எனக் கூறுகின்முன். இதன் அடிப்படையில் குறிப்பிட்ட சிவன் கோயில்கள் ஐம்பூதத் தலங்களாகக் கொள்ளப்படுகின்றன. காஞ்சி 'மண்கோயில்' என்றும், திருவண்ணாமலை 'தீக்கோயில்' என்றும், திருவானைக்கா 'நீர்க்கோயில்' என்றும், காளத்தி 'காற்றுக் கோயில்' என்றும், சிதம்பரம் 'விண்கோயில்' என்றும் போற்றப் பெறுகின்றன. இவ்வாறே கரிவலம்வந்தநல்லூர் தீக்கோயில் என்றும், சங்கரன் கோயில் மண்கோயில் என்றும், கோவிற்பட்டி காற்றுக்கோயில் என்றும், தாருகாபுரம் நீர்க்கோயில் என்றும், தேவதானம் (இராமநாதபுரம் மாவட்டம்) விண்கோயில் என்றும் கொள்ளப்பெறுகின்றன.

ஐம்பூதத் தலங்களில் ஒன்முகக் கருதப்படுவதும், பால்வண்ணத்தை உடைய இலிங்கத் திருவுருவைக் கொண்டதும், 'குட்டித் திருவாசகம்' என்று அழைக்கப்படும் அந்தாதிகளால் சிறப்பித்துப் பாடப்பெற்றதுமான கரிவலமவந்தநல்லூர் திருக்கோயில் நம்மனோரால் பேணிப் பாதுகாக்கப்படவேண்டிய ஒன்மும்.

———

# ஐ - அஇ - அய்

[மயிலம், ஆ. சிவலிங்கனர்]

ஆசிரியர் தொல்காப்பியர் 'ஐ' என்னும் நெட்டுயிர் அ,இ என்னும் இரண்டு குற்றுயிர்களின் கூட்டொலியாகவும் அமையும்; அ,ய் என்னும் உயிரும் மெய்யுங்கூடிய கூட்டொலியாகவும் அமையும் என்ருர்.

அகர இகரம் ஐகார மாகும் (தொல். எழுத். 54)
அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்
(தொல். எழுத். 56)

என்பன அவர் வாக்குகள். அஇ—ஐ, அய்—ஐ என வரும்.

இவ்விரண்டு கூட்டொலிகளுக்கும் உள்ள வேறுபாடு இரண்டு மாத்திரையும் ஒருமாத்திரையுமாம். இக் கூட்டொலிகள் தனி ஐகாரத்துக்கன்றி மொழியில்வரும் ஐகாரத்துக்கேயாம். அதனால்தான் இக் கூட்டொலிகளை நூன்மரபிற் கூருது மொழி மரபிற் கூறினர் ஆசிரியர்.

ஐவனம் என்பது அஇவனம், அய்வனம் எனவரும். இவற்றுள் அஇவனம் என்பது ஒலிவடிவிற்குரியதேயன்றி வரிவடிவிற்குரிய தன்று. அய்வனம் என்பது ஒலிவடிவிற்கும் வரிவடிவிற்கும் உரியது. இதனை யுணர்ந்தமையால்தான் இளம்பூரணர் "ஐயர்—அஇயர் எனவரும் அது கொள்ளற்க" என்றும், நச்சினர்க்கினியர், "ஐவனம் அஇவனம் எனவரும். ஆகும் என்றதனன், இஃது இலக்கணம் அன்ருயிற்று" என்றும் எழுதினர்.

ஆசிரியர் அகரஇகரம் ஐகாரமாகும் எனக் கூறியும், இளம்பூரணர் அஇயர் என்பதைக் கொள்ளற்க என்றது, ஒலிவடிவில் அஇ ஐ ஆயினும் வரிவடிவில் எழுதிக்கொண்டு வழங்கற்க என்பதற்கேயாம். அதனல்தான் அஃது இலக்கணம் அன்ருயிற்று என்ருர் நச்சினர்க்கினியர். இலக்கணம் என்றது ஈண்டு செய்யுள் இலக்கணத்தினையாம்.

பொய் வினைக் குதவும்............
செய் வினைக் குதவும்............
மை விளக் கியதே............
கை விளக் கெடுத்த......... (கம்பராமாயணம் 1887)

இப் பாடலின் நான்கடிகளிலும் முதற்சீர்களில் உள்ள பொய், செய், மை, கை என்றவற்றை எதுகைநயம் கருதிப் பொய், செய், மய், கய் என அமைக்கின் சீரின் ஓசை சிதையாமல் அலகிடுதற்கு ஏற்ப அமைதலையும், பொய், செய், மஇ, கஇ என அமைக்கின் மஇ, கஇ என்பனவற்றுக்கு இரண்டு மாத்திரையமைந்து ஓசை சிதைந்து அமைதலையும் காண்க. மை, கை என்பனவற்றிற்கும் இரண்டு மாத்திரையாதலின் ஓசைசிதைவில்லையோ எனின் ஐகாரம் "ஓரளபாகும் இடனுமா ருண்டே" (தொல். எழுத். 57) என விதியிருத்தலின் சிதைவில்லை யென்க. மஇ, கஇ என்பனவற்றையும் அவ்வாறு கொள்ளாமோ என்னின் மை கை என்பன தனியெழுத்துகளாதலின் அளவு குறையும் என்பதில் தவறில்லை. மஇ கஇ என்பன இணைந்த எழுத்துக்களாதலின் அளவுகுறையும் என்பது தவறாகும். இவ்வாறே அம் முதற்சீர் களிலுள்ள வினை என்பதற்கும் கொள்க வினை—வினய் என்னின் ஓசை தவறுபடாது. வினை—வினஇ என்னின் தவறு படுமாறு காண்க அதனால்தான் நச்சினார்க்கினியர் இலக்கணம் அன்று என்றார். எனவே அஇ என்னும் வடிவம் வரிவடிவிற் கன்று; ஒலிவடிவிற்கே கொள்ளல்வேண்டும்.

இனி ஆசிரியர் அகர இகரம் ஐகாரமாகும் எனக் கூறியவர், அகர யகரம் ஐகாரம் ஆகும் என ஆக்கச்சொல் கொடுத்துக் கூறாமல் 'ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்' எனக் கூறியதும் காணுதல் வேண்டும். 'மெய்பெற' என்பது வடிவுபெற என்பதாம். ஐஆகும் என்பதற்கும் ஐ வடிவுபெறும் என்பதற்கும் வேறுபாடுண்டு. ஐ ஆதல் இயற்கை; ஐவடிவு பெறுதல் செயற்கை. அஇ—ஐ ஆவது அடிநாக்கு அடி அண்ணத்தை நன்றாகப் பொருந்தாமல் இலேசாகப் பொருந்துவதாலாகும். அய்—ஐ ஆவது அடிநாக்கு அடி அண்ணத்தை நன்றாக உறப் பொருந்துவதா லாகும். எனவே, அஇ என்பதற்கும் ஐ என்பதற்கும் ஒலி வேறு பாடில்லாமையின் வரி வடிவில் அஇ என எழுதவேண்டுவதில்லை. அய் என்பதற்கும் ஐ என்பதற்கும் ஒலி வேறுபாடு சிறிதுள் ளமையின் அய் என்பது ஐ என்பதன் இடத்தைப்பெறும் என்பதை எழுதிக்காட்டலாம். அதனால்தான் 'அஇயர்' என்பதைக் கொள்ளற்க என்றார் இளம்பூரணர்.

ஆசிரியர் 'ஐயென் நெடுஞ்சினை' எனக் கூறியதையும் நாம் கருதுதல்வேண்டும். சினை என்பது ஒரு முழுப்பொருளின் ஒருகூறு ஆகும். ஐயென்சினை என்றமையால் அந்த ஐ என்பது தனி ஐ அன்று; மொழியில் வரும் ஐ என அறிதல்வேண்டும். தனி நெடிலாகிய ஐகாரத்தை அய் என ஒலித்தலும் எழுதுதலும் கூடாது. மொழியில் வரும்போதே அவ்வாறு ஒலிக்கவும் எழுதவும் செய்யலாம். ஆனல் அஇ என்பதை அவ்வாறு அப்படியே ஒலிக்கலாமே தவிர எழுதுதல் கூடாது. உதாரணம் காட்டும் போது ஐ என்பது அஇ என்பதன் கூட்டொலியாகவும் வரும் என்பதற்காக அஇ எனக் காட்டுவதல்லாமல் வேறின்று. ஒருவர் ஒருவரிடம் தனி ஐகார எழுத்தை எழுதிக் காட்டென்ருல் ஐ என்று காட்டவேண்டுமே தவிர அஇ என்று காட்டலாகாது.

மொழிகளில் வரும் ஐகாரத்தை அஇ எனவும் அய் எனவும் எழுதிக் காட்டும்போது அய் என்பதையே கொள்ளவேண்டுமோ அஇ என்பதையும் கொள்ளக்கூடாதோ எனின் மொழியின் முதல் இடைகளில் அய் என்பதை மட்டும் எழுதலாம்; மொழியிறுதியில் அஇ என்பதையும் எழுதலாம். இதை ஆசிரியர்,

இகர யகரம் இறுதி விரவும் (தொல். எழுத். 58)

என்னும் நூற்பாவால் குறிப்பிடுகிருர். படை என்பதைப் படஇ எனவும் படய் எனவும் குறிப்பிடலாம். ஐகாரம் பற்றித் தொடர்ந்து கூறிவரும் ஆசிரியர், இந் நூற்பாவிலும் ஐகாரம் பற்றியே கூறிய தாகக் கொள்ளல்வேண்டும். அதனல் மொழி முதலிலும் இடையிலும் வரும் ஐகாரத்தை அகர யகரத்துடன் எழுதுதல்வேண்டும்; மொழியிறுதியில் வரும் ஐகாரத்தை அகரத்துடன் இகரத்தையாவது யகரத்தையாவது சேர்த்து எழுதலாம் என்ற கருத்துப் படவே இந் நூற்பாவைக் கூறினர் ஆசிரியர்.

இவ்வாறு கொள்ளாமல் இளம்பூரணர் "இகர விற்று மொழிக்கண் யகரமும் (அதுபோல) இகரமும் விரவிவரும்" எனப் பொருள் எழுதி, "நாய்—நாஇ எனக் கண்டுகொள்க" எனவும் எழுதினர். இது யகரஈறு இகரஈருக வந்ததற்கு நாய்—நாஇ என உதாரணம் காட்டினரேயன்றி, இகரஈறு யகரஈருக வந்ததற்கு உதாரணம் காட்டவில்லை.

நச்சினர்க்கினியர் "இகரமும் யகரமும் ஒருமொழியின் இறுதிக்கண் ஒசை விரவிவரும்; அவ் விகாரம் கொள்ளற்க" என எழுதி "நாய்—நாஇ எனவரும்" எனக் காட்டினர். நாஇ

என்பதைக் கொள்ளற்க என்றதால் இவர்க்கு இஃது உடன்பாடில்லை என்பது பெறப்பட்டது.

கணி என்பது கணிய் எனக் கல்வெட்டுகள் சிலவற்றிற் காணப்படுவதால் மொழியிறுதியில் இகரஈற்றுச்சொல் யகரத்துடன் சேர்ந்தும்வரும் என்ற கருத்தில் இகர யகரம் இறுதி விரவும் என்றார் ஆசிரியர் என்பாரும் உளர். விரவும் என்பதற்குச் சேர்ந்து வரும் எனப் பொருள் கொள்வர் அவர். இது பிழைபட்ட வழக்கே யன்றி வேறன்று.

இதுகாறும் கூறியவற்றால், ஐ என்பது அஇ அய் என்பவற்றின் கூட்டொலியாகவும் வரும் என்பதும், அஇ என்பது ஒலி வடிவிற்கேயமைய அய் என்பது ஒலிவடிவிற்கும் வரிவடிவிற்கும் அமையும் என்பதும், மொழியின் முதலிலும் இடையிலும் அஇ என்பது வரிவடிவில் வாராது என்பதும், எனினும் மொழியிறுதியில் வரும் என்பதும், இகர யகரம் இறுதி விரவும் என்பதற்கு அஇ அய் என்பவற்றின் இகரமும் யகரமுமே கொள்ளவேண்டும் என்பதும், கணி என்பது கணிய் எனக் கல்வெட்டுகளிற் காணப்படுவது பிழைபட வெட்டப்பட்டது என்பதும் அறியலாம்.

---

## தூய்மை என்பது யாது?

மனிதர்களுக்குத் தூய்மை என்பது, வெறும் உடல் குளிப்பில், ஆடை சூழல் துப்புரவில் மட்டும் இல்லை. அவா என்னும் உள் அழுக்கு நீங்குவதுதான், அதாவது அவாவாமைதான், தகுதியான தூய்மை. அதைப் பெறுவதற்கு வழியும் தெரிவிக்கிறார் திருவள்ளுவர். உயிர் உணர்ச்சியில், நினைவுசொல் செயல்களில், வாய்மை கூடினால் தூய்மை உண்டாகிவிடும். உள்ளத்தில் அழுக்கை வைத்துக்கொண்டு புறத்தில்மட்டும் தூய்மைப்படுத்திக் கொண்டால், அந்த உள் அழுக்கு மேலும் மிருந்து புறத் தூய்மையையும் அழுக்காக்கிவிடும். புற அழுக்கைவிட உள்ளழுக்காகிய அவா மிகவுங் கொடுமையானது.

—தவத்திரு அழகரடிகள்

(திருக்குறள் அறம், பக். ௨௧௧)

# தமிழக அரசின் பரிசு பெற்ற
# கழக நூலாசிரியர்கள்



### திரு. என். கே. வேலன், பி. ஏ

சேலத்திற்கடுத்த பாகற்பட்டி என்னும் ஊரில் 1907-ல் பிறந்தவர். இவர் தமிழ்நாடு அரசு காவல் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவர் அறிவியல் அறிஞர். 'இயற்கையும் செயற்கையும்' 'மண்ணும் விண்ணும்' போன்ற அறிவியற் கட்டுரை நூல்களையும், 'மின்சாரத்தின் கதை', 'காற்றின் கதை' அணுவின் கதை' போன்ற அறிவியலுண்மை நூல்களையும் படைத்துள்ளார். குழந்தைகட்காக நூறு நூல்களுக்கு மேல் எழுதியுள்ளார். கதை, கட்டுரை மட்டுமல்லாது பல மொழிபெயர்ப்பு நூல்களையும் ஆக்கித் தந்துள்ளார். இவர் 30 12-1979 அன்று மறைந்தார்.

மண்ணிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் எவ்வாறு உண்டாயிற்று? இதனைக் கண்டுபிடித்தவர் யார்? எண்ணெய்த் தொழில் எப்படியெல்லாம் வளர்ச்சி அடைந்து வருகிறது என்பன போன்ற செய்திகளை விளக்கும் கல் எண்ணெயின் கதை என்னும் இவரது நூல் முதற் பரிசு (ரூ. 2000) பெற்றது.



### திரு. உ. அஞ்சனம் அழகிய பிள்ளை
### எம். எசி. (வே)

கோவையிலுள்ள தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகத்தில் தோட்டக் கலைத் துணைப் பேராசிரியராகப் பணியாற்றிவரும் இவர் கன்னியாகுமரி மாவட்டம் அழகிய பாண்டியபுரம் என்னும் ஊரில் 18—5—1940-ல் பிறந்தவர். கடந்த 18 ஆண்டுகளாகத் தோட்டக் கலைத் துறையில் பழங்கள், காய் கறிகளில் ஆய்வு செய்து வருகிறார். இவரது ஆய்வின் பயனாகப் பிகே எம்-1 என்னும் தக்காளியும், பிகே எம்-1 என்னும் புடலையும் வெளி வந்துள்ளன. மாமரமும் வளர்ப்பு முறைகளும், பழவளம்,

காட்டுவளம், மாதுளை போன்ற பல சிறந்த நூல்களை எழுதியுள்ளார் இவருடைய ஆங்கில ஆய்வுக் கட்டுரைகள் இந்தியாவிலுள்ள முதன்மையான தோட்டக்கலை இதழ்களில் வெளிவந்துள்ளன.

இரண்டாவது பரிசு பெற்ற (ரூ. 1000) இவருடைய காட்டுவளம் என்னும் நூல் இந்தியாவிலும் குறிப்பாகத் தமிழகத்திலும் அமைந்துள்ள காடுகளைப் பற்றியும் அவற்றின் வளர்ப்பு முறை பற்றியும் விள்க்குகிறது.

### திரு. பூவண்ணன்



"பூவண்ணன்" என்னும் புனை பெயர் கொண்டுள்ள திரு. கோபாலகிருஷ்ணன் 4-9-1932-ல் பிறந்தவர். இவர் சென்னை வைணவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். இவர் புகழ் பெற்றுள்ள குழந்தை எழுத்தாளர்களில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கவர். சிறுவர்களுக்காக அறுபதுக்கு மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். பள்ளி மாணவராக இருந்தபோதே எழுதத் தொடங்கிய இவர் கல்லூரி மாணவராக இருந்தபோது 'கரும்பு' என்னும் சிறுவர் வார இதழின் ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். இவருடைய "ஆலம் விழுது" என்னும் புதினம் தமிழ், கன்னடம், இந்தி மொழிகளில் திரைப்படமாக்கப் பட்டுள்ளது. 1971-ல் சிறந்த திரைப்படக் கதாசிரியர் எனவும், 1979-ல் சிறந்த குழந்தைப் படக் கதாசிரியர் எனவும் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பரிசு பெற்றுள்ளார்.

இரண்டாவது பரிசு பெற்ற (ரூ. 1000) மூவேந்தர் கதை என்னும் நூல் கரிகாற் சோழன், சேரன் செங்குட்டுவன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஆகிய மூவேந்தர் பற்றிச் சிறுவர்கள் அறிந்துகொள்ளும் வண்ணம் எழுதப்பெற்று உள்ளது.

———

# பல்துறைக் கலைஞர் பல்லாண்டு வாழ்க!

58ஆம் அகவையில் அடியெடுத்து வைத்துள்ள தமிழவேள் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் ஆய கலைகள் அறுபத்து நான்கு என்ற எல்லையைக் கடந்து பற்பல கலைகளிலும் வல்ல பல்துறைக் கலைஞராக (many-sided genius) விளங்குகின்றார். அளப்பரிய நினைவாற்றல் வாய்ந்த இவரது கை எத்தனையோ நூல்களை, கவிதைகளை, கட்டுரைகளை, கடிதங்களை அழகுதமிழில் எழுதிக் குவித்துள்ளது; எழுதிக்கொண்டேயிருக்கிறது. வெல்லுஞ் சொல் வல்ல இவரது நா எழுச்சியும் கிளர்ச்சியும் ஊட்டும் சொற்பொழிவுகளை, இல்லை கருத்துச் செறிந்த சொற்பொழிவுகளைப் பொழிந்துகொண்டிருக்கின்றது. இவரது உள்ளமோ தமிழினம் வாழவும், தமிழ் வாழவும் என்னென்ன திட்டங்களை இயற்றி நிறைவேற்றலாம் என்று எண்ணிக்கொண்டேயிருக்கின்றது.



மேலும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைமைப் பொறுப்பு சட்டப் பேரவையில் எதிர்க் கட்சித் தலைவராயிருந்து பொறுப்பு மிக்க கடமைகளை இடையறாது இயற்றும் பணி, பல பத்திரிகைகளுக்குக் கட்டுரைகளை 'நேரம் இல்லை' என்னாது வரையாது வரைந்து வழங்கும் வன்மை, மாவட்டந்தோறும் கழக மாநாடுகளைக் கூட்டிச் சிறப்புற நடாத்தி வருதல், நாள்தோறும் தம்மிடம் வரும் நூற்றுக்கணக்கானவரைச் சந்தித்துப் பேசும் காட்சிக் கெளிமை, ஈன நிலைக்கு ஆளான ஈழத் தமிழ் மக்களுக்கு என்ன உதவிகள் செய்யலாம் என்ற இடைவிடாச் சிந்தனை, நடுவணரசு ஆளுங் கட்சியுடன் உறவு கொண்டிருந்தாலும் தம் உயிர்க் கொள்கையான இந்தி எதிர்ப்பைக் கைவிடாதிருத்தல், தமிழினம் தன்மானங் குன்றாமல் வாழத்தக்க வழிவகைகளை ஆராய்ந்துகொண்டிருத்தல், "உள்ளத் திருப்பது கவிதை, உணர்ச்சி ஊற்றெடுப்பது கவிதை" என்ற கருத்துக் கேற்ப நயமிக்க சொல்லோவியங்களைப் புதுக்கவிதைகளில் வடித்துத் தருதல், பண்டிதர்கள் பாராட்டப், பாமரர்கள் வியப்பெய்தச் 'சொல்லித் தெரிந்துகொள்ள முடியாத கலையான' காமத்துப் பாலுக்கும் மற்ற குறட்பாக்களுக்கும் புதிய கண்ணோட்டத்தில் குறளோவியம் தீட்டுதல், சங்க இலக்கியக் கருத்துக்களுக்குத் தங்கத் தமிழில் தகதகக்கும் வண்ணம் புதுமைப் பொருள் கூறிச் சங்கப் பாடல்களுக்குப் புத்துயிர் ஊட்டுதல், கேட்குந்தோறும் இனிக்கும் வசனங்களையும் கதைகளையும் திரைப் படங்களுக்குத் தீட்டிக் கொடுத்தல், எந்தத் தலைப்பிலும்

இலேடை நயமும் சிந்தனை நயமும் மிக்க செந்தமிழ் நடையில் தேன் மாரி பொழிந்ததெனச் சொற்பெருக்காற்றுதல், ஆளுங்கட்சியினர் தவறு செய்கின்ற போதெல்லாம் சுட்டிக்காட்டித் திருத்த விழைக்கும் கடமை உணர்வு, கழகக் கண்மணிகளுக்கு, உடன் பிறப்புக்களுக்கு முரசொலியில் நாள்தோறும் உணர்ச்சியூட்டும் மடல்கள் தீட்டுதல், இலக்கியக் காட்சிகளைப் புதிய சொல்லோவியமாகப் படைத்துத் தருதல், அப்பப்ப! இன்னும் எத்துணை ஆற்றல்கள் இவரிடம் மறைந்து (latent talents) கிடக்கின்றனவோ? சிக்கல்களுக்கு உடனுக்குடன் தீர்வு கண்ட இவர்தம் ஆட்சித் திறனை யார்தாம் வியவாதிருக்க முடியும்? மக்களின் கிளர்ச்சிகளைத் தக்காங்கு நிறுத்துகின்ற முயற்சி களில் இவரைப்போல் வெற்றி எய்திபவர் யார்? கேளாரும் வேட்ப மொழியும் சொற்றிறன் படைத்த சொல்வேந்தர் வேறு யார்? அரசியலுக்கும் அன்னைத் தமிழுக்கும் பிரிக்கவியலாத பிணைப்பை இணைத்தவர் யார்? அவர்தாம் கலைஞர். இத்தகைய பல்லாற்றல் வாய்ந்த கலைஞரை மணிவிழாக் கொண்டாடும் இச்சை. சி. நூற்பதிப்புக் கழகம் வாயார, உளமார வாழ்த்திப் போற்றுகிறது. தமிழ்த் தலைத் திருமகனும் பல்துறைக் கலைஞர் பல்லாண்டு வாழ்க வாழ்க, தமிழையும் தமிழினத் தையும் வளரச் செய்க என்று வாழ்த்தி வணங்குகிறது.

———

## கழக நூல்களுக்கு அரசின் பரிசுகள்

தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறை தமிழில் வெளியிடப் பெறும் சிறந்த நூல்களை அறிஞர் குழுக்களை அமைத்துத் தேர்ந் தெடுத்துப் பரிசுகளை வழங்கி வருகிறது. 6—6—1981 இல் கலைவாணர் அரங்கத்தில் நடைபெற்ற பரிசளிப்பு விழாவில் 1974-75 இல் வெளி வான இருபத்து மூன்று நூல்கள் தேர்ந்தெடுக்கப்பெற்று அவற்றின் ஆசிரியர்களுக்கு மாணபுமிகு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்களும், சட்டமன்ற மேலவைத் துணைத் தலைவர் மாண்புமிகு புலமைப் பித்தன் அவர்களும் பரிசுத் தொகைகளை வழங்கினர். கழகம் வெளியிட்ட மூன்று நூல்களுக்குப் பரிசு வழங்கப் பெற்றது. மாண்புமிகு கல்வியமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினர். திரு. என் கே. வேலன் அவர்கள் எழுதிய "கல்எண்ணெயின் கதை" என்ற நூல் முதல் பரிசைப் பெற்றது. (ரூ 2000). திரு அஞ்சனம் அழகியபிள்ளை அவர்கள் இயற்றிய 'காட்டு வளம்' என்ற நூலும், திரு. பூவண்ணன் அவர்கள் எழுதிய 'சிறுவர்க்கு மூவேந்தர் கதை' என்ற நூலும் இரண்டாம் பரிசினைப் பெற்றன. (ரூ 1000/-) இந் நூல்களை வெளியிட்ட கழகத் திற்குப் பாராட்டிதழ்களும் வழங்கப்பெற்றன. திரு. வேலன் அவர்கள் 30-12-'79 இல் இறைபடி சேர்ந்துவிட்டமையால் அவர்கள் மனைவி திருவாட்டி கு. கௌரீதம், பி.ஏ., பி.டி., முதற் பரிசுத் தொகையினைப் பெற்றுக்கொண்டனர்.

இந் நூல்களை எழுதிய கழக ஆசிரியர்களைப் பாராட்டி மகிழ்ச்சி யைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

———

# நாவிதழ் வேந்தர் திரு. சி. பா. ஆதித்தனர் மறைவு

தமிழ்மொழி – நாடு – தமிழினம் ஆகியவற்றிடம் பற்றுடையவரும், சிறந்த திறம் படைத்த இதழாளரும், முன்னாள் தமிழக அமைச்சர்களுள் ஒருவருமான 'தினத்தந்தி' நாளிதழ் நிறுவனர் திரு. சி. பா. ஆதித்தனர் அவர்கள் கடந்த 24–5–81 அன்று சென்னையில் தமது 76ஆம் அகவையில் காலமானார் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம்.



திரு. ஆதித்தனர் அவர்கள் 1905ஆம் ஆண்டு செட்டம்பர் திங்கள் 27ஆம் நாள் நெல்லை மாவட்டம் காயாமொழி என்னும் ஊரிற் பிறந்தவர். இவரைத் தந்தையார் சிவந்தி ஆதித்தனர் புகழ்பெற்ற வழக்கறிஞராகத் திகழ்ந்தவர். திருவைகுண்டத்தில் கல்வி கற்கத் தொடங்கி, திருச்சியில் கல்லூரிக் கல்வி பெற்று எம். ஏ. பட்டம் பெற்றார். பின்னர் 1928இல் இலண்டனுக்குச் சென்று பார்-அட்-லா பட்டம் பெற்றார்.

இவர் இலண்டனில் இருந்தபோது இதழ் நடத்தும் பணியில் மிக்க ஆர்வம் காட்டியதோடு இதழ் நடத்தும் பணியின் நுணுக்கங்களையும் நன்கு தெரிந்து கொண்டார்.

1933இல் சிங்கப்பூர் சென்று, அங்குக் கோவிந்தம்மாள் என்பவரைத் திருமணம் செய்துகொண்டார். சிங்கப்பூரில் பணம் திரட்டி வந்து தமிழகத்தில் மதுரையில் 'தந்தி' என்ற இதழைத் துவங்கினர். அதுவே பின்னர்த் 'தினத்தந்தி' ஆயிற்று.

'நாம் தமிழர்' 'தமிழ் ராஜ்ய கட்சி' என்ற பெயர்களில் கட்சிகளை நடத்தினர். 1947 முதல் 1953 வரை தமிழகச் சட்டமன்ற மேலவை உறுப்பினராகவும் 1957 முதல் 1962 வரை சட்டமன்ற உறுப்பினராகவும், மீண்டும் 1964இல் மேலவை உறுப்பினராகவும் இருந்தார்.

1967இல் அறிஞர் அண்ணா அவர்கள் தலைமையில் அமைந்த அமைச்சரவையில் சட்டப் பேரவைத் தலைவரானர். பின்னர் 1969இல் கலைஞர் கருணாநிதி முதல்வரானபோது ஆதித்தனர் கூட்டுறவுத்துறை அமைச்சர் பொறுப்பேற்றார்.

நாடு, மொழி ஆகியவற்றில் பற்றுக் கொண்ட இவர் பல அரசியல் போராட்டங்களில் பங்கு கொண்டார். 1965இல் இந்தி எதிர்ப்பில் ஈடுபட்டுச் சிறை ஒறுப்புகட்கு ஆட்பட்டார்.

இவை அனைத்துக்கும் மேலாகத் தமிழக மக்கள் நாள் தவறாமல் நாளேடு படிக்கும் பழக்கத்தை உண்டுபண்ணியவர் இவர் எனில் அது மிகையன்று. அந்த அளவுக்கு அவரது 'தினத்தந்தி' நாளேடு நாட்டில் செல்வாக்குப் பெற்றுள்ளது. இவரது மறைவு இதழுலகிற்குப் பேரிழப்பாகும்.

(இப்போது அரசு அலுவலகங்களில் காட்சி அளிக்கும் திரு. சர்மா எழுதிய 'திருவள்ளுவர் உருவப்படம் தமக்கு எரிச்சலை உண்டுபண்ணுகிறது' என்று சி. பா. ஆதித்தனர் கழக ஆட்சியாளரிடம் சொன்னமை முன்பு செல்வியில் வெளியிடப்பட்டுள்ளது.)

———

# தமிழ்ப்பேரறிஞர் ஆ சுப்பையா மறைவு

ஒரு மொழிக்கு உலகளாவிய அளவில் மாநாடு நடத்தும் புதுமையை நிகழ்த்திக் காட்டிய பெருமகனார் திரு. ஆ. சுப்பையா அவர்கள் 25—5–81 அன்று காலமானார்கள். உலகோர் வியக்கும் வண்ணம் உலகத் தமிழ் மாநாடுகளைத் தவத்திரு. தனிநாயக அடிகளார் துணையுடன் நடத்தியவர் அவர். தமிழ் மொழியைக் காக்கவும் இந்தித் திணிப்பை எதிர்க்கவும் தமிழக அரசியல் தலைவர்களையும் அறிஞர் பெருமக்களையும் ஒன்று திரட்டித் தனிப் படையை அமர்த்தியவர் அவர். பல்வேறு நாட்டு அறிஞர்களும் தமிழாய்வில் ஈடுபடுவதற்காக உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தையும் நிறுவியவர் அவரே. வாயளவிலும் விளம்பரத்திற்காகவும் நிலையில்லாத பணிகளைச்செய்யும் 'தமிழ்த் தொண்டர்கள்' வாழுகின்ற நாட்டில் உண்மையாகத் தமிழுக்கு உழைத்துத் தமக்கென்று சிறு விளம்பரம்கூடத் தேடாத 'உண்மைத் தமிழ்த் தொண்டர்' அவர். அவர் தமிழுக்காற்றியுள்ள பணிகள் அனைத்தும் அழிக்க முடியாதவை. நிலையானவை. ஆல்போல் வளர்ந்து தழைக்கக் கூடியவை. எதையும் தமக்கென்ன கிடைக்குமென்று பாராது தமிழுக்கென்ன கிடைக்குமென்று பார்த்துப் பார்த்துச் செய்தவர் அவர். தமிழில் மொழியியல் ஆய்வுகள் பெருக வேண்டுமென்று உலக மொழியியல் பேரறிஞர்களுடன் கூடித் தமிழ்மொழியியல் துறை வேரூன்றச் செய்தவர் அவர். 'தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும்வகை செய்தல் வேண்டும்' என்று பாரதி பாடியதைச் செயல் வடிவில் செய்து காட்டியவர் அவர்.



1897இல் முத்துக்குளிக்கும் தூத்துக்குடியில் தோன்றியவர் திரு. சுப்பையா. அவ்வூரிலுள்ள எஸ். ஏ. வி. உயர்நிலைப்பள்ளியில் படித்தார். பின் திருச்சி செயின்ட் சோசப்புக் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றார்.

படிப்பு முடிந்தபின் 1918 இல் 'பேங்க் ஆப் மெட்ராஸ்' என்ற வங்கியின் மதுரைக் கிளையில் தம் வங்கிப் பணியை ஏற்றார். அதுமுதல் அவர் பணி முழுவதும் வங்கிப் பணியாகவே அமைந்து

விட்டது. 'பேங்க் ஆப் மெட்ராஸ்' 'இம்பீரியல் பேங்க்' என்ற அரசுச் சார்புடைய வங்கியாக மாறியது. 1945 இல் தாமே விரும்பி முன்னதாகப் பணியிலிருந்து ஓய்வு பெறும் நிலையில் இந்தியன் ஓவர்சீசு வங்கி அவரை விரும்பி அழைத்தது.

திரு சுப்பையா அவர்கள் இந்தியன் ஓவர்சீசு வங்கியில் பணியேற்றபோது அது வளராத நிலையிலேயே இருந்தது. அவர் பெரும்பாடுபட்டு வளர்த்ததுடன் மட்டுமன்றி அது மேன்மேலும் ஓங்கி வளர்வதற்குரிய நல்ல வலுவான அடிப்படையையும் அமைத்துக் கொடுத்தார். அலுவலக நடைமுறைகள் பிற வங்கி களைப் போலல்லாது கண்டிப்புடனும் திறமையுடனும் இயங்கும் வகையில் அவரால் செயல்படுத்தப்பெற்றன. 1952 இல் அந்த வங்கியிலிருந்தும் ஓய்வு பெற்றார்.

வங்கித் துறையில் அவர் ஈடுபட்டிருந்தாலும் பல்லாண்டு களாக அவருக்குத் தமிழ்மீது தனி ஆர்வம் இருந்து வந்தது. தவத்திரு. தனிநாயக அடிகள் 'Tamil Culture' என்ற இதழைத் தூத்துக்குடியிலிருந்து 1950-60 ஆம் ஆண்டுகளில் வெளியிட்டது முதல் அவருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்கள்.

இந்தியை எதிர்ப்பதில் திரு. ஆ. சுப்பையா மிகப் பெரிய சாதனையை நிகழ்த்தினார். இந்தியை ஆதரித்து வந்த இராசாசி அவர்களுடன் கலந்து பேசி அவரையே இந்தியை எதிர்க்கச் செய்தார். அதற்கு வித்திட்ட நிகழ்ச்சி திரு. சுப்பையா அவர்கள் தம் இல்லத்திலேயே கூட்டிய கூட்டமாகும். அக் கூட்டத்தில் தமிழகத்து அரசியல் தலைவர்களான தந்தை பெரியார், இராசாசி, பேரறிஞர் அண்ணா கி. ஆ. பெ. விசுவநாதம் போன்றவர்களும் தமிழறிஞர் பலரும் கலந்துகொண்டனர். அதன் பின்னர்தான் இந்தித்திணிப்பு தமிழ்நாட்டில் வலுப்பெற்றது.

தமிழ்மொழியியல் துறையில் ஆழ்ந்து பயின்றார்கள். குறிப் பாகத் தமிழ் எழுத்துச் சீர்திருத்தம், தமிழ் எழுத்துக்களில் ஒலி முறை போன்ற துறைகளில் பல புதிய கருத்துக்களை எடுத்துக் கூறினார்கள். அவர் எழுதிய மொழிபற்றிய ஆய்வுக் கட்டுரைகள் அமெரிக்காவிலிருந்து வெளிவரும் 'Language' என்ற உலகப் புகழ்பெற்ற மொழியியல் இதழில் வெளிவந்துள்ளன. இத் துறையில் சிறந்து விளங்கிய உலகின் பல்வேறு பல்கலைக் கழகங் களில் பணியாற்றிவரும் பேராசிரியர்களுடன் அவர் தொடர்பு கொண்டிருந்தார்.

தமிழ் உலக நாடுகளிலுள்ள பல்வேறு பல்கலைக் கழகங்களில் எங்கெங்குப் பயிற்றுவிக்கப் பெறுகின்றது, மேலும் எந்தெந்தப் பல்கலைக் கழகங்களில் பயிற்றுவிக்க வாய்ப்பு உள்ளது என்பதை

ஆராய முப்பதுக்கு மேற்பட்ட நாடுகளுக்குச் சென்று பேராசிரியர்கள் பலரைச் சந்தித்து விரிவான அறிக்கையொன்றைத் திரு. சுப்பையா தந்துள்ளார். உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் அவ்வறிக்கையில் கண்டுள்ள பரிவுரைகளை ஏற்று நடத்தலாம்.

உலகத் தமிழ் மாநாடு நடத்தும் எண்ணம் தில்லியில் கூடிய கீழ்த்திசை மொழியாளர்கள் கூட்டத்தில் கலந்துகொண்ட தமிழறிஞர்களிடையே தோன்றியது. அதில் முனைப்பாக நின்று செயல்பட்டவர் தவத்திரு. தனிநாயக அடிகளும் திரு ஆ. சுப்பையா ஆகிய இருவரும் ஆவர்.

முறையே ஐந்து மாநாடுகள் கோலாலம்பூர், சென்னை, பாரீசு, யாழ்ப்பாணம், மதுரை ஆகிய இடங்களில் நடைபெற்றன. யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற நான்காவது உலகத் தமிழ் மாநாடு தவிர முதல் மூன்று மாநாடுகளை நடத்தியவர் மேற்கூறிய இருவருமேயாம். ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டை அண்மையில் சிறப்பாக நடத்தி முடித்தவர் திரு. ஆ. சுப்பையா அவர்களே ஆவர். 85 வயதாகிய நிலையிலும் தணியா ஆர்வத்துடன் முன்னின்று மாநாட்டை நடத்தினார். இன்று உலகிலுள்ள பல்வேறு பல்கலைக்கழகத் தமிழறிஞர்களை அவர் மட்டுமே அறிவார். வயதான அவரிடம் ஏன் இப்பொறுப்பை ஒப்படைத்தார்கள் என்று சில 'தான் தோன்றிகள்' குறிப்பிட்டாலும் அத் தகுதி அவருக்கு மட்டுமே உண்டு என்பதை இனி வருகிற மாநாடுகள் உணர்த்தப் போகின்றன. மதுரையில் அவர் நடத்திய மாநாட்டைப் போல இதற்கு முன்பு நடத்திய மாநாடுகள் நடைபெறவில்லை. இனியும் இப்படி நடத்துவது கடினம். 800 க்கு மேற்பட்ட பேராளர்களை 40க்கு மேற்பட்ட நாடுகளிலிருந்து வரவழைத்து 300க்கு மேற்பட்ட ஆய்வுரைகளை வழங்கச்செய்த பெருமை அவர் ஒருவருக்கே உண்டு. இத் திங்களில் வெளிவரவிருக்கும் 3000 பக்கங்கள் கொண்ட மதுரை மாநாட்டு ஆய்வுரைகள் கொண்ட மூன்று தொகுதிகள் இவ் வுண்மையை உணர்த்தும். உலக மாநாடு என்று கூறிக் கொண்டு தமிழர்கள் நிறைந்த சென்னை மாநகரிலேயே 17 பேர்களைக் கொண்டு உலக மாநாடு நடத்திய பேர்வழிகள் சாதிக்க முடியாததை நான்கு முறை உலகத்தார் வியக்கும் வண்ணம் சாதித்துக் காட்டியவர் திரு. ஆ. சுப்பையா ஆவர்.

தமிழுக்கு நிலையான பணியை அமைதியாகச் செய்துவந்த ஒரே ஒரு பெருமானார் மறைவுற்றது தமிழன்னைக்குப் பேரிழப்பாகும். அவரைப் பிரிந்து வாடும் வயதான அவர்தம் துணைவியாருக்கும் அவர் தம் மக்களுக்கும் எங்கள் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் 97ஆம் ஆண்டு நிறைவுவிழா

தூத்துக்குடி திருமந்திர நகரில் மேத் திங்கள் 30, 31ஆம் நாள்களில் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் தலைமையில், தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் 97ஆம் ஆண்டு நிறைவு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. சபைத் தலைவர் வரவேற்புரை நிகழ்த்தினார். தமிழவேள் திரு ஏ. பி. சி. வீரபாகு அவர்கள் தொடக்கவுரை நிகழ்த்தினார். திரு. ந. ரா. முருகவேள், இலஞ்சி திரு. அ. இ. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., செல்வி சோ. பாகீரதி ஆகியோர் சொற்பொழிவாற்றினர். அதே பந்தலில் 1—6—81இல் ஸ்ரீ பாகம்பிரியாள் மாதர் கழகத்தின் 58ஆவது ஆண்டு நிறைவு விழாவும் செல்வி சோ. பாகீரதி எம்.ஏ., எம்.லிட்., அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

## மயிலை சீனி வேங்கடசாமி அவர்களின் முதலாண்டு நினைவு விழா

மறைந்த ஆராய்ச்சிப் பேரறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி அவர்களின் முதலாண்டு நினைவு விழா 12—5—81 அன்று, மயிலைக் காரணீசுவரர் கோயில் தெருவிலுள்ள அவரது இல்லத்தில் நடைபெற்றது. திருவாளர்கள் ஊ. செயராமன், மா. சு. சம்பந்தன் ஆகியோர் மறைந்த அறிஞரின் மாண்புகள் பற்றி உரையாற்றினர். திரு. வெங்கட வரதன் தமிழ் இன்னிசைப் பாடல்கள் பாடினார்.

## சொல்லாக்க மன்றக் கூட்டம்

9—5—81 அன்று மாலை 6 மணியளவில் சென்னை மாவட்ட நூலகக் கட்டடத்தில், பேராசிரியர் இரா மதிவாணன் அவர்கள் தலைமையில் சொல்லாக்க மன்றக் கூட்டம் நடைபெற்றது. முனைவர் இரா. வா. சண்முக சுந்தரம் அவர்கள் மருந்துவக் கலைச் சொற்கள் என்னும் தலைப்பில் அரிய உரையாற்றினார். சென்னைப் பல்கலைக் கழக உயிர் வேதியல் துறையில் இதுவரை முனைவர் (Ph.D.) பட்டத்திற்குரிய நான்கு ஆய்வேடுகள் தமிழில் படைக்கப்பெற்றிருப்பதையும் பல்கலைக் கழக அறிவியல் ஆராய்ச்சித் துறைகளில் தமிழ் அரியணை பெறும் வகையில் உயிர் வேதியல் துறை எங்ஙனம் முன்னோடியாக விளங்குகிறது என்பதையும் தெளிவுபடுத்தினார். மன்றப் பொருளாளர் திரு. க. வெங்கடேசனார் நன்றி கூறினார்.

## உடுமலை நாராயணக்கவி மறைவு

பல திரைப்படங்கட்குப் பாடல் இயற்றியவரும் பகுத்தறிவுக் கொள்கைப் பாடல்களையும் சீர்திருத்தக் கருத்துடைய பாடல்களையும் எழுதிப் புகழ்பெற்ற தமிழ்க் கவிஞருமான உடுமலை நாராயணக்கவி அவர்கள் 24—5—81 அன்று காலமானார்கள் என்ற செய்தியறிந்து

வருந்துகிறோம். திரைப்பட உலகில் இந்தியும், வடமொழியும் பாடல்களில் மேலாண்மை செலுத்திவந்த நேரத்தில் நல்ல தமிழில் சித்தர்கள் பாடல் முறையில் பாடல்களை இயற்றிய இவர்தம் ஆற்றல் போற்றற்குரியது. மறைந்த கவிஞரின் குடும்பத்தார்க்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## இசைக்கு இசையும் மழை

அண்மையில் சென்னை தியாகராய நகர் சிவ-விட்டுணு கோயிலில் தமிழ்நாடு தேவார ஓதுவார் மூர்த்திகள் மழையை வேண்டி மேகராகக் குறிஞ்சியைப் பாடினர். மறுநாள் மழையும் பெய்தது. தேவாரம் சைதை கூத்தரசு அவர்கள் தலைமையில் திருஞானசம்பந்தரின் ஏழு பதிகங்கள் பாடப்பெற்றன. கூத்தரசு அவர்களின் மாணவிகள் நளினி, கிரிஜா முதலியோரும் தேவாரப் பாடல்களை உளம் குழைந்து பாடினர்.

27—11—66 இல் கழகம் 'மழை வேண்டல் பதிகம்' நூலை வெளியிட்டு அந்த வறட்சிக் காலத்தில் எல்லோரும் மழை வேண்டிப் பாடுமாறு தூண்டியது. 9—3—1975 இலும் 'மழையே வா' என்ற நூலை வெளியிட்டு மழையை வரவழைக்கத் துணை புரிந்தது,

## முகவை மாவட்டத் திருக்குறட் பேரவை மாநாடு

இராசபாளையத்தில் திருவள்ளுவர் மன்றச் சார்பில் முகவை மாவட்டத் திருக்குறட் பேரவை மாநாடு, மேத்திங்கள் 30, 31 ஆம் நாட்களில் மிகச் சிருஞ் சிறப்புமாக நடைபெற்றது. தவத்திரு குன்றக்குடி அடிகளார் மாநாட்டுக்குத் தலைமை தாங்கினர். முனைவர் வ. சுப. மாணிக்கம், புலவர் நடேசனர், முனைவர் சிலம்பொலி செல்லப்பன், புலவர் பா. நமசிவாயம், திருவாட்டி காந்திமதி ஆகியோர் சொற்பொழிவாற்றினர். விழாவின் இரு நாட்களிலும் சென்னை மறைமலையடிகள் நூல் நிலையத்தாரால் 'திருக்குறள் நூற்காட்சி' அமைக்கப்பெற்றிருந்தது. நூற்காட்சி அமைப்பினைப் பாராட்டும் வகையில் மாநாட்டில் ரூ. 500·00 பரிசாக வழங்கினர். அம் மாநாட்டினை யொட்டித் திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைப் போட்டி யொன்றும் நடைபெற்றது.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு, ரு௬-சக௬ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | சு. பழநியப்பன் விசயலட்சுமி திருமண நன்கொடை (5-6-1981) | 11 00 |

———

# மதிப்புரை

## தீர்ப்புத் திரட்டு (திங்கள் இதழ்)

[தலைமைப் பதிப்பாசிரியர்: திரு. வெ. சுப்பிரமணியன், பி. ஏ., பி. எல். தீர்ப்புத் திரட்டு அலுவலகம், உயர்நீதி மன்றம், சென்னை 600104. விலை ரூ. 3-00.

ஆங்கிலேயர்கள் மூந்நூறு ஆண்டுகளாக இந்தியாவை ஆண்டு வந்திருப்பினும் ஆங்கில மொழி இந்திய மக்களில் மிகக் குறைந்த விழுக்காட்டினரையே கவர்ந்துள்ளது. இருப்பினும் அஃது ஆட்சி மொழியாக இருந்த காரணத்தால் அரசுத் துறைகளில் அஃது இன்றி யமையாத இடத்தைப் பிடித்துள்ளது. அறங்கூறு நல்லவைகள் ஆங்கிலத்திலேயே நடைபெறுகின்றன. ஆனால், வழக்குமன்றங்களுக்கு வரும் வழக்குகளோ பெரும்பான்மை ஆங்கில அறிவு பெறாத மக்களுடைய வழக்குகளே.

விடுதலை பெற்ற நாட்டில் நாட்டுக் குடிமக்களுக்குப் பயன்படும் வகையில் அரசுத் துறைகள் செயல்பட வேண்டுமென்ற நோக்கத்துடன் மாநில மொழிகள் ஏற்றம் பெற்று வருகின்றன.

அவ்வகையில் தமிழ் 'மாவட்ட நீதிமன்றங்'களிலிருந்து உயர்நீதி மன்றம் வரை தமிழிலேயே வாதுரைகளும் தீர்ப்புகளும் அமைய வேண்டுமென்ற எண்ணம் செயல்படுத்தப்படுகின்றது.

ஆங்கிலத்திலேயே பேசி, எழுதிப் பழக்கப்பட்ட அறங்கூறு அவைத்தலைவர்கட்கு உதவும் வகையில் தமிழில் முன்மாதிரியான தீர்ப்புகளைக் கொடுக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் 'தீர்ப்புத் திரட்டு' என்னும் திங்களிதழினைத் தமிழக அரசின் இசைவுடன் சென்னை உயர்நீதி மன்றம் வெளியிட்டு வருகின்றது.

முதல் திங்கள் 1980 சனவரித் திங்களில் வெளியாயிற்று. தொடர்ந்து பன்னிரண்டு இதழ்கள் வெளிவந்துள்ளன. இதில் இந்திய உச்ச நீதிமன்றமும் சென்னை உயர்நீதி மன்றமும் ஆங்கிலத்தில் வழங்கி வரும் தீர்ப்புகளின் தமிழாக்கம் திரட்டித் தரப்பட்டுள்ளன.

தமிழாக்கம் எளிமையான செவ்விய நடையில் எல்லோரும் புரிந்துகொள்ளும் வகையில் அமைந்துள்ளது. இயன்றவரை நல்ல தமிழ்ச் சொற்களைப் பயன் படுத்தியுள்ளமைக்காகப் பாராட்டுகின்றோம். சட்டங்களும் தீர்ப்புகளும் தெளிவான நடையில் எழுதப்பெற்றால் தான் குழப்பம் இருக்காது. அவ்வகையில் குழப்பம் விளைவிக்காத நல்ல நடையில் உள்ளது போற்றுதற்குரியது.

வழக்குரைஞர்களுக்கும் நீதிமன்ற நடுவர்களுக்கும் பயன்படும் வகையில் சட்டச் சொற்களின் தமிழாக்கம் அவ்வப்போது தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன. சொற்களின் தமிழாக்கம் சுருக்கமாகவும் தெளிவாகவும் உள்ளன. மீண்டும் மீண்டும் கையாள்வதற்கு எளிமையாக உள்ளன. இந்த நல்லபணி தொடர்ந்து உயர்நீதி மன்ற அளவில் தமிழ் இடம் பெற உதவுமாக.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

பதிவு எண் M 4899.



கப்பர் அச்சகம், சென்னை-1.